279

# கம்பன் மணி மலர்

# 1991

பிரமோதூத பங்குனி 13 உ முதல் 16 உ வரை

1991 மார்ச் 27 முதல் 30 வரை நிகழ்ந்த

## 53 ஆவது கம்பன் திருநாள் வெளியீடு

கம்பன் கழகம்

கம்பன் மணி மண்டபம், காரைக்குடி-623 002

# உள்ளுரை

## முன்னுரை

கம்பன் ஓர் உலக மகாகவி. கவிச் சக்கரவர்த்தி. காப்பிய வானில் கதிரவனாய் நின்று ஒளிர்பவன். இவன் கல்லாத கலையும், வேதக்கடலும் உலகில் இல்லை எனலாம். ஒன்பதாம் நூற்றாண்டில் வாழ்ந்தவன் நம் தந்தை பிரான் கம்பன்.

முத்தரையரிடமிருந்து தஞ்சைப் பகுதியை மீட்டுச் சோழப் பேரரசை நிறுவிய விஜயாலயன் காலத்தில் மிளிர்ந்தவன் கம்பன். விஜயாலயன் மகன், கோதண்டராமன் எனப் பெயர் சூடிக் கொண்ட ஆதித்தன் (கி. பி. 871-907) காலத்தில், அவனால் பெரிதும் மதிக்கப் பெற்ற வனாய் விளங்கியவன் கவிச்சக்கரவர்த்தி.

கம்பனை, பெற்ற தந்தையினும் பேணிக் காத்து நின்றவர் சடையப்ப வள்ளல். இன்று கதிராமங்கலம் என விளங்கும் வெண்ணெய் நல்லூர்தான் சடையப்பர் வாழ்ந்த வள நகர். கம்பனின் பல்துறைப் புலமையும், எல்லையிலாக் கவிதா சன்னதமும், கற்றோரை யெல்லாம் ஈர்த்து நின்றன. முடியுடைத் தார் வேந்தர்களும், ரசிக பெருமக்களும், கம்பனைப் பெரிதும் மதித்துப் போற்றுவாராயினர்.

கம்பனின் பேராற்றற் பெரும்புலமைக்கு என்றும் கட்டியங் கூறிக்கொண்டு விளங்குவது அவன் அருளிய இராமாவதாரம் என்னும் இராமகாதை! தமிழ் மொழியின் வளத்திற்கும், தமிழர் தலை நிமிர்வுக்கும், ஒப்பற்ற உதவியாய் நின்று நிலவுவது கம்பராமாயணம். தமிழ் மொழியின் தனிப் பெரும் காப்பியத்தை, எம்மப்பன் கம்பன், சடையன் பதியாம் வெண்ணெய்நல்லூரில் அரங்கேற்றினான். மன்னர்களும், மறையோர்களும், ரசிகப் பெரு மக்களும், அறம் பேணும் பொதுமக்களுமாக நிறைந்திருந்த கண்ணியம் நிறைந்த அவைக் களத்திலே அரங்கேற்றம் நடைபெற்றது. பவித்திரமான அக்காப்பியம் அரங்கேறிய புனித விழா ஒரு பெரும் திருவிழாவாக, ''நாவலோ, நாவல்!'' என்று நடந்திருக்க வேண்டும்.

சகாப்தம் 807; கலியாண்டு 3986க்குச் சரியான விசுவாவசு - பங்குனி 4ஆந் தேதி (கி.பி: 886 பெப்ருவரி - 22) புதன்கிழமை அஸ்த நட்சத்திரமே இராமாவதாரம் அரங் கேறிய பெருநாள். அன்றுதான் நம்முடையவன் கம்பனை, ''கவிச்சக்கரவர்த்தி'' என்று அறிவுடையுலகம் மனமாரப் பாராட்டி விருதளித்து மகிழ்ந்தது.

கம்பன் பிறந்த நாளை நாமறிய எவ்வகைச் சான்றுகளும் நமக்குக் கிடைக்கவில்லை. ஆனால் ''கவிச்சக்கரவர்த்தி'' பிறந்த நாளை நாம் நன்கறிவோம். பங்குனி - அத்த நாளில் தானே ''கவிச்சக்கரவர்த்தி'' பிறந்தான்! எனவே இராமாவதாரம் அரங்கேறியதும் ''கவிச் சக்கரவர்த்தி'' என்ற விருதுப் பெயரைக் கம்பன் ஏற்றருளியதுமான அந்தப் பங்குனி அத்த நாளையே கம்பன் திருநாளாக - ஜன்ம நட்சத்திரமாக - ஏற்று, விழா எடுத்து வருகிறோம்.

மகம், பூரம், உத்தரம் ஆகிய முதல் மூன்று நாள்களில் காரைக்குடியில் உள்ள கம்பன் மணி மண்டபத்திலும் பங்குனி அத்த நாளில் நாட்டரசன் கோட்டையில் கவிச்சக்கரவர்த்தி சமாதி கொண்டு எழுந்தருளி அருள் சுரக்கும் கம்பன் பள்ளி படைத் திருக்கோயிலிலும், தூய இலக்கியப் பெருவிழாவாகக் கொண்டாடி மகிழ்கிறது கம்பன் கழகம்.

இவ்விழா எவ்விதமான சாதி, சமய, மொழி, கட்சி, பால் வேறுபாடின்றி யாவரும் கலந்து மகிழும் அருமையுடையதாகும். புலவர்களும், கலைஞர்களும், கவிஞர்களும், திறனாய் வாளர்களும், ரசிகர்களுமாக ஆயிரக்கணக்கானவர்கள் ஆண்டுதோறும் வந்து கலந்து கம்பன் புகழ் பாடியும், கம்பன் புகழ் பருகியும் பெருமை செய்கின்றனர்.

கம்பன் திருநாட் செலவு ஆண்டுக்காண்டு கூடிக்கொண்டே வருகிறது. ஐம்பத்து இரண்டு ஆண்டுகட்கு முன் முன்னூற்றைம்பது ரூபாய் அளவில் தொடங்கிய கம்பன் திரு நாளின் செலவு ஆண்டு தோறும் வளர்ந்து எத்துணைச் சிக்கனமாக நடத்தினும், ரூபாய் முப்பதினாயிரத்துக்கும் மேல் உயர்ந்து விட்டது. நிலையறியும் உடனுறை நல்லன்பர்கள் முன் வந்து உவந்தளிக்கும் நன்கொடை, செயலின் ஒரு சிறுபகுதியையே ஈடு செய்கிறது.

இந்நிலையில் கம்பன் பற்றிய கட்டுரைகளைத் தொகுத்துப் பயனுள்ள மலர் வெளி யிடுவதென்றும், அதில் விளம்பரங்கள் வெளியிடுவதென்றும், முடிவு செய்யப்பெற்றது. அதற்குக் கம்பன் பால் அன்பும், திரு. கம்பன் அடிப்பொடியின் பால் பரிவும் உள்ள அன்பர்கள் பலர் விளம்பரங்கள் தந்துதவி, இப்புனிதப் பணிக்கு ஆக்கம் தர முன்வந்துள்ளனர்.

இவர்கட்கெல்லாம் எளியோம் என்ன கைம்மாறு இயற்ற வல்லோம்? எம்மப்பன் கம்பனும் அவன் பாடிப் பரவிடும் முழுமுதற் பரம்பொருளும், இவ் அறவோர்கட்கும் இவர் களின் முயற்சிகட்கும், தொழில்துறை வாணிபங்கட்கும் எல்லா நலன்களையும், வளங்களை யும் அருளிக் காத்தருள வேண்டுமென்று மனமொழி மெய்களால் வணங்கி வாழ்த்துகிறோம்.

எல்லா வகையாலும், முன்னரும், பின்னரும் கம்பன் திருநாளுக்கும், கம்பன் திருப்பணி கட்கும் உதவிய - உதவி வருகிற-அறவுள்ளம் படைத்த பெரியோர்கள், அன்பர்கள் யாவர்க்கும் என்றும் மறவா நன்றியுடன் பணிவார்ந்த வணக்கம் செலுத்தி மகிழ்கிறோம்.

இம்மலரை மிக்க சிரத்தையுடன் அச்சிட்டு உதவிய மதுரை வேன்கார்டு அச்சகத்தார்க்கு எங்கள் நன்றி உரியதாகும்.

கம்பன் மணி மண்டபம்
காரைக்குடி-623 002
27, மார்ச் 1991.

அன்பும் பணிவுமுள்ள
கம்பன் கழகத்தார்

''முன்னமருட் கம்பனெனும் நாமம் கேட்டான்
மூர்த்தியவன் இராமகாதை முழுதும் கேட்டான்
பின்னருள்ள சான்றோர்கள் பேசக் கேட்டான்
பேர்த்துமவன் சேவடிக்கே பிச்சன் ஆனான்
அன்னையுடன் அத்தனுமே கம்ப னென்றான்
அவன்பெயராய்த் தன்பெயரை ஆக்கிக் கொண்டான்
தன்னைமறந் திட்டான்தன் நாமம் கெட்டான்
தலைப்பட்டான் சேர்ந்திட்டான் தலைவன் தாளே''.

— கவிஞர் சொ. சொ. மீ. சுந்தரம்



''நின்னார்வார் பிறரன்றி நீயே ஆனாய்;
நினைப்பார்கள் மனத்துக்கோர் வித்து மானாய்''

"Who can say more than this rich praise that
you alone are you?

**त्वमेव माता च पिता त्वमेव,**
**त्वमेव बन्धुश्च सखा त्वमेव,**
**त्वमेव विद्या द्रविणं त्वमेव,**
**त्वमेव सर्व मम देव देव ॥**

''நின்னை வணங்கி, நீவகுத்த நெறியில் நிற்கும் அதுஅல்லால்
என்னை அடியோம் செயற் பால?''

# தந்தையை "மறந்தும் பொய்யிலன் ஆக்கிய மைந்தன்"

கம்பராமாயண திலகம் திரு. கி. பசுபிராஜன்

"சிறந்த தம்பி திருஉற எந்தையை
மறந்தும் பொய்யிலனாக்கி வனத்திடை
உறைந்து தீரும் உறுதி பெற்றேன், இதிற்
பிறந்து யான் பெறும் பேறென்பதி யாவதே"

இப் பாடல் கோசலையை இராமன் சந்தித்த பின் அவன் காடு செல்ல வேண்டாம் என்று வேண்டிய கோசலையை நோக்கிக் கூறுவ தாக வருவது. இதில் 'மறந்தும்' என்ற வார்த்தை நம்மை அலைக்கிறது. எதை மறந்தும்? யார் மறந்தும்? அதனால் எப்படி மறந்தவன் பொய்யனாகிறான்? என்பதை ஆராய வைக்கிறது.

இராமனுக்கு முடிசூட்ட நிச்சயித்த மறு நாள் காலை மங்கல நிகழ்ச்சிகளுக்கு தயரதன் வராமலிருக்கவே வசிஷ்டர் சுமந் தரனை அனுப்புகிறார். வந்த சுமந்திரனை வாசலிலேயே சந்தித்து, உடனே இராமனை அழைத்து வருமாறு கூறுகிறாள் கைகேயி. மகிழ்ச்சி நிறைந்த மனத்தோடு சுமந்திரன் இராமன் மாளிகை சென்று கைகேயி கூறி யதைக் கூறலும், இராமன் சுமந்திரனுடன் தேரில் புறப்பிட்டு வருகிறான்.

இதற்குள் கைகேயி இராமனை அழைத்து வரக் கூறிய செய்தி எப்படியோ பரவி விடுகிறது. தேர் விரைவில் செல்ல முடியாதபடி தெருவில் மக்கள் கூட்டம் கூடி விடுகிறது. வீடுகளின் சாளரங்களி லெல்லாம் மகளிர்களின் முகமதிகள் ஒளி விடுகின்றன. மக்கள் ஆரவாரத்தைக் கண்டு கொண்டே சென்ற இராமன் ஓரிடத்தில் சிலர் பேசியதைக் கேட்க நேரிடுகிறது.

முதலாமவன் :
தாய் கையில் வளரவில்லை யப்பா இந்த இராமன்!

இரண்டாமவன்:
அந்த பாக்கியம் பெறக் கேகயன் மகள் தான் தவம் செய்திருந்தாள்.

மூன்றாமவன்:
பாரேன்! அவளுக்குத்தான் இராமனிடம் எத்துணைப் பாசம்! தன் மகனுக்கு அரசு வேண்டுமென்று மணமாகும் முன்பே தயர தனிடம் வரம் பெற்றவள் எவ்வளவு பெருந் தன்மையோடு மாற்றவள் மகனுக்கு அரசளிக்கிறாள்!

"தாய் கையில் வளர்ந்திலன்; வளர்த்தது தவத்தால்
கேகயன் மடந்தை; கிளர் ஞாலம் இவன் ஆள,
ஈகையில் உவந்தவள் இயற்கையிது வென்றால்
தோகையவள் பேருவகை சொல்லலரி தென்பார்.

இராமன் அறிவு விழித்துக் கொள்கிறது. தன்னை முதன் முதல் ஆசிர்வாதம் செய்து அனுப்பத்தான் சிற்றன்னை தன்னை அழைத்து வரச் சொல்லியிருக்கிறாள் என்ற மகிழ்ச்சியோடே தான் இராமன் கைகேயி யின் மாளிகைக்குச் சென்றிருக்க வேண்டும் என்றால் தவறில்லை.

மாளிகை வாயிலில் மலர்ந்த முகத்தோடு தயரதனுடன் தன்னை வரவேற்க வருவாள் "தாயென நினைவான் முன்னே கூற்றென தமியள் வந்தாள்" என்கிருர் கம்பர். இராமன் உள்ளத்தில் ஓர் அதிர்ச்சி ஏற் பட்டிருக்க வேண்டும். எனினும் வெளியே ஒன்றும் காட்டாமல் எப்போதும் போல தாயை வணங்கி தானை மடக்கி, வாய் புதைத்து நிற்கிருன்.

அவனை வரவேற்கவோ அன்பு மொழி எதுவும் கூறவோயின்றி, கைகேயி இராமனிடம் ''உன் தந்தை உன்னிடம் கூற வேண்டியது ஒன்று உண்டு நீ இசைந்தால் கூறுகிறேன்'' என்கிறுள். இராமனுக்கு ஒன்றும் புரியவில்லை. எனினும் ''எந்தை கூறநினைந்ததை நீரே கூற வந்ததை என் பேறாகக் கருதுகிறேன் கூறுங்கள் தாயே'' என்று பதிலிறுக்கிறான்.

''ஆழிசூழ் உலகமெல்லாம் பரதனே ஆள
நீ போய்
தாழிரும் சடைகள் தாங்கித் தாங்கரும்
தவமேற் கொண்டு
பூழிவெங் கானம் நண்ணிப் புண்ணிய
தாயே துறைகளாடி
ஏழிரண்டாண்டில் வா என்று ''இயம்
பினன் அரசன்'' என்றாள்

என்று கூறி முடிக்கிறாள்.

கேட்ட இராமனது உள்ளம் எத்தனை உணர்ச்சி வேறுபாடுகளுற்றதோ அறியோம். ஆனால் கம்பர், இராமன் ஒரு சலனமுமின்றி, ''தாயே! இயம்பினன் அரசன் என்பானேன்? தாங்களே கூறுவதாகத்தான் இருந்தாலென்ன? நான் மறுக்கப் போகிறேனா? என் தம்பிக்குக் கிடைத்த செல்வம் நான் பெற்றது தானே? அரசருடையதாயினும் சரி நும்மதாயினும் சரி இக்கட்டளையைத் தலைமேல் ஏற்றுக் கொண்டேன். இன்றே வனம் செல்கிறேன். இனி ஒரு தரம் தங்களிடம் வந்து விடைபெற்றுக் கொள்ள இயலாது. போய் வருகிறேன் தாயே'' என்று கூறியவன் தந்தையைப் பார்க்கலாமா என்று எண்ணிச் சற்று நின்று எண்ணமிடுகிறான்.

சிற்றன்னை என்னிடம் நடந்து கொண்ட விதமும், தந்தை வெளிவராதபடி உள்ளே வைத்துத் தமியளாக வந்து, அவள் பணியோ அல்லது தந்தை பணியோ - தந்தை பணி என்று கூறி ஓர் எழுத்தன் வந்து கூறுவது போலல்லவா கூறினாள்? ஆகவே இரவில் தந்தைக்கும் அன்னைக்கும் விவாதம் ஏதோ தீவிரமாக நடந்திருக்க வேண்டும். தந்தை பணி என்று அவள் கூறியது, தந்தை மனமொப்பிக் கூறியதில்லை. அவள் தான் ஏதோ சாகஸம் செய்து வாங்கியிருக்க வேண்டும் என்பதைத் தானே காட்டுகிறது. எனவே நான் தந்தையைப் பார்க்கப் போனால் பல சிக்கல்கள் ஏற்படும். என் மேல் வைத்த பாசத்தால் தான் பலவந்தத்தின் பேரில் கொடுத்த வாக்கை மீறி வீண் பழிக்குள்ளாக நேரிடும். ஆகையால் தந்தையைப் பார்க்காமல் போய் விடுவதுதான் சரி என்று முடிவெடுத்து ''தன்துணைத் தாதை பாதம் அத்திசைநோக்கித் தாழ்ந்து,'' கோசலை மாளிகை நோக்கிச் செல்கிறான்.

செல்லும் வழியெல்லாம் இராமன் சிந்தை கருட வேகத்தில் செயல்படுகிறது. தான் பெற்ற மகன் பரதன் இருக்க அவனைப் பேணாது மாற்றாந்தாய் மகனாகிய தன்னை வாஞ்சையோடு வளர்த்த கைகேயி எப்படி தன்னைப் பதினாலாண்டு வனம் போக்கத் துணிந்தாள் என்பதை அவனால் நிச்சயிக்க முடியவில்லை. காலையிலிருந்து நடந்த நிகழ்ச்சிகளை அலசுகிறான். விபரீதமாக ஒன்றும் நடந்ததாகத் தோன்றவில்லை. நெடுநேரம் கணிதரிகளோடு இருந்து விட்டுத்தான் கைகேயி மாளிகைக்குத் தசரதன் போகிறான். அழைக்கப் போன சுமந்தரனிடம் இராமனை உடனே அழைத்து வா என்றுதான் அனுப்புகிறாள். இரவில் ஏதோ தந்தைக்கும் தாய்க்கும் விவாதம் நடந்திருக்கிறது. திடீரென தன்னைக் காட்டுக்கு அனுப்பி பரதனுக்கு அரசை வாங்கும்படி அவள் மனம் திரிந்ததா திரிக்கப்பட்டதா என்று விளங்கவில்லை. தன்னை உயிரென மதித்திருந்த தந்தை எப்படி இம்முடிவுக்கு இசைந்தார். தானாகவா அல்லது வன்முறையா என்பதும் விளங்கவில்லை. தேர் வரும் வழியில் ஒருவன் 'ஈகையில் உவந்தவள்' என்று கூறியது நினைவுக்கு வந்தது. ''ஞாலம் ஈகை'' என்பது நாட்டை ஈன்ற

தாகத் தானே காட்டுகிறது. ஈதல் என்றால் ஈபவனுக்கு ஈயப்படுவது சொந்தமாயிருக்க வேண்டுமே. நாடு கைகேயிக்குச் சொந்தமா, எடுத்து எனக்கு ஈய? என்று எண்ணமிடுகிறான். கைகேயியை விவாகம் செய்வதற்கு முன் தன் தந்தை அவளுக்குப் பிறக்கும் குழந்தைக்குத் தான் அரசுரிமை என்று வாக்களித்த செய்தி நினைவுக்கு வருகிறது. நீதியின் நிலையமான இராமனது உள்ளம் விவாதிக்கிறது. கைகேயிக்கு மகன் பிறக்கும் முன் கோசலைக்கோ, சுமித்திரைக்கோ மகன் பிறந்து விட்டாலும் தயரதன் வாக்குப்படி அவர்கள் உரிமை மறுக்கப்படுகிறதே? நியாயமில்லையே? அரச குடும்பத்தில் மூத்தவர்க்கு அரசு என்பதல்லவா நீதி, மரபு. கைகேயிக்கு வாக்களிக்கும் போது இதெல்லாம் தயரதன் நினைக்கவில்லை, மறதி! எனவே மறதிதான் இந்நிகழ்ச்சிகளுக்கெல்லாம் காரணம் என்று தெளிகிறான். தயரதனின் மறதி மட்டுமா?

இப்படி வாக்களித்துத் தான் கைகேயியைத் தயரதன் மணந்தான் என்ற உண்மை உலகறிந்த ஒன்று. தேரில் வரும் போது பாமர மக்களில் ஒருவனே கைகேயி ஈகையில் உவந்தனள் என்று கூறியதின் மூலம் அவன் வரையில் இவ்வுண்மை தெரிந்திருக்கிறது என்பது தெளிவு. இந்த உண்மையை யார் யாரெல்லாம் எப்போதெல்லாம் மறந்து செயல்பட்டனர் என்பதை ஆய்ந்தால் எல்லோர் மறதியுமே தான் இந்நிகழ்ச்சிக்குக் காரணம் என்பது விளங்கும். முடிந்த வரை அதனை ஆய்வோம்.

1. கைகேயியை மணக்கு முன் அரச நீதிப்படி மூத்தவர்க்குத்தான் அரசு என்பதையும் கைகேயியை மணந்து அவளுக்கு மகன் பிறக்கு முன் கோசலைக்கோ சுமித்திரைக்கோ மகன் பிறந்து விட்டால், முன் சொன்ன அரச நீதி இடையூறாகும். அது மட்டுமா! இக்குவாகு குலமரபும் மீறப்பட்டதாகுமே என்பதை மறந்து விடுகிறான் தயரதன்.

2. தனக்குப் பின் அரசைத் தேர்ந்தெடுக்க முனைந்து சபை கூட்டும் போது தயரதன் இவ்வரத்தை மறந்து விட்டான். மறக்கா விட்டால் சபையையே கூட்ட வேண்டாமே ... பேசாமல் பரதனுக்கு முடிசூட்ட வேண்டியது தானே.

3. இவ்வர உண்மை குடிமக்களே விமர்சிக்கும் அளவுக்குத் தெரியப்பட்டிருந்தது என்பதை முன்பு பார்த்தோம். அப்படியிருந்தும் வசிஷ்ட குலகுருவோ, ''தம்முயிர்க் குறுதி எண்ணாது தலைமகன் வெகுண்ட போதும் வெம்மையைத் தாங்கி நீதி விடாது நின்றுரைக்கும் வீரர்களாகிய மந்திரிமார்களும் மற்றும் சான்றோரும் தயரதன், சபையை கூட்டிய போது எவரும் இவ்வர உண்மையை நினைக்கவில்லையே. அதே போல் மக்களைக் கூட்டி, தயரதன் கேட்கும் போதும் இராமனுக்கு முடிசூடுவதுதான் சரி என்று மக்களும் சொன்னார்களே! அவர்களும் மறந்து விட்டார்களே! தயரதனது முடிவு அவன் வாக்கை மீறுமே என்று அவனைத் திருத்த வேண்டிய கடமை குருவுக்கும் சான்றோருக்கும் மக்களுக்கும் உண்டல்லவா? அனைவருமே மறந்தனர்.

4. பிறரை விடுவோம். பெற்ற தாயே இவ்வரத்தை மறந்து விட்டது போல் தான் காண்கிறது. தயரதன் வருமுன் கைகேயியின் மனதைக் கலைக்க வந்த கூனி இராமன் நாளை முடிசூடுகிறான் என்று கூறிய போது கைகேயியின் உள்ளம், தன் மகனுக்குத் தயரதன் அளித்த உரிமை பறிக்கப் படுகிறதே என்று கொதித்து எழுந்தாகத் தெரியவில்லை. மாறாக அச்செய்தி கூறிய கூனிக்கு வைரமாலையைப் பரிசளிக்கிறாள் கைகேயி.

5. இவ்வர உண்மை கோசலைக்கும் தெரிந்ததுதான். ஆனால் தயரதன் இராமனுக்கு முடிசூட்ட நினைத்ததைக் கோசலையிடம் கலந்தா முடிவு செய்தான்?

இராமன் முடிசூடப் போகும் முடிவைத் தோழி மூலம் அறிந்த கோசலை, அந்த முடிவு

தயரதனது வரத்திற்கு மாறுபட்டது என் பதை உணரத்தான் செய்கிறாள். மூத்தவர்க் கரசு உரித்து என்பதையும் அவள் மறக்க வில்லை. இருந்தும் வரத்தை மீறி மகனுக்கு முடி சூட்டப் போகிறார்கள் என்பதில் அவள் மகிழ்ச்சி கொள்கிறாள். அரச நீதியனைத் தும் தெரிந்தவள் மறுநாள் மௌலி புனைந்து இராமன் வருவான் என்று எதிர்பார்த்தாள். மௌலி புனையாமல் மஞ்சன நீரால் நனையாமல் ஒரு தீர்மானமான முகத்தோடு வருகின்ற இராமனைப் பார்க்கிறாள். வணங்கிய மைந்தனை நோக்கி ''நினைந்த தென் இடையூறுண்டோ நெடுமுடி புனை தற்கு''? என்று வினவுகிறாள்.

''மங்கை அம்மொழி கூறுலும் மானவன்
செங்கை கூப்பி, 'நின் காதல் திருமகன்,
பங்கமில் குணத்து எம்பி, பரதனே,
துங்க மாமுடி சூடுகின்றான்'' என்றுன்.

பதிலிறுக்கிறான் இராமன். கோசலை யின் உள்ளத்தில் ஒரு கணம் மகன் முடி சூடவில்லையே என்று நினைக்கிறது. மறு கணம் அவள் இராமனை நோக்கி

''முறைமை அன்று என்பதொன்று உண்டு;
மும்மையின்
நிறைகுணத்தவன்; நின்னினும் நல்லனால்;
குறைவிலன்...........''

''என்று, பின்னரும்; மன்னவன் ஏவிய தன் றெணாமை மகனே! உனக்கு அறன்; நன்று, நும்பிக்கு நானிலம் நீ கொடுத்துத் தொன்றி வாமுதி, ஊழி பல 'வென்றாள்.''

கோசலையின் இம் மொழிகளைக் கேட்ட இராமனின் உள்ளத்தில் சுருக்கென்று ஒரு குற்ற உணர்வு தோன்றுகிறது. தாய்மொழிப் படித் தசரதன் கொடுத்த வாக்குப்படி அவ னுக்குப் பின் அரசு, பரதனைச் சாரவேண்டும். அவனது அந்த உரிமையைப் பறித்துத் தந்தை தனக்களிக்க முடிவு செய்துள்ளார். பர தன் அனுமதி உண்டா! இல்லையே? அவன் அயோத்தியில் இல்லாத போது அவனுக்குரிய அரசைப் பறித்து எனக்குக் கொடுத்தது நியாயமா? இல்லையே! அவையில் அரசை எனக்கு அளிக்க, தந்தை என்னிடம் இசைவு கேட்ட போது, நானும் அவரது முன்னைய வாக்குறுதியை மறந்து தானே அவர் வேண்டு கோளை ஏற்றேன். அம்மா ஏதோ கைகேயி யின் சம்மதம் பெற்றுத்தான் தந்தை இம்முடிவு எடுத்திருக்க வேண்டும் என்று நினைத்துக் கொண்டு கூறியிருக்கிறாள். அது தவறு...... சரி...... முறைமை என்றாளே அது எனது மூத்தவர்க்குரித்து அரசு என்பதைத் தானே காட்டுகிறது அந்த உரிமை இருக்கும் போது தந்தை பரதனுக்கு எப்படி முடிசூட்ட முடியும்? கைகேயிக்குக் கொடுத்த வாக்கைத் தன் கணவன் காப்பாற்றினான் என்று அவரை மெச்சுவது போல் அல்லவா தாய் கூறினாள். என் உரிமை இருக்கின்றதே? அதை வைத் துத் தான் ''தம்பிக்கு நானிலம் நீ கொடுத்து'' என்று கூறியிருக்கிறாள். நான் அவள் கூறிய படி என்மூத்தவர் உரிமையை விட்டுக் கொடுத் தாலும் தந்தையின் முதல் வாக்கை நிறை வேற்ற முடியாது. தாய் ''நீ கொடுத்து'' என்றதால் அரசு எனக்குக்கிடைத்து, அப்புற மல்லவா நான் அவனுக்குக் கொடுக்க வேண் டும். சிற்றன்னையின் வரங்கள் வேறு இருக் கின்றனவே. எத்தனை சிக்கல்கள். சரி எப் படியும் அன்னையின் வாக்கை நிறைவேற்று வேன் (தந்தையைப் பொய்யிலன் ஆக்குவேன் என்று முடிவெடுத்ததைத்தான் ''மறந்தும் பொய்யிலன்'' என்ற பாடல் காட்டுகிறது). சபையில் நான் முதல் வரத்தை நினைவூட்டி யிருந்தால் பின் வந்த இத்தனை சிக்கல்கள் நேர்ந்திருக்காது. இனி என்ன செய்வது? சிறிய தாய் பெற்ற இரு வரங்களையும் நிறை வேற்ற வேண்டியதுதான். அவையும் தந்தை யினுடைய வாக்குத்தானே. அவையும் பொய்க் கலாகாதல்லவா.

இலக்குவன் சீதையுடன் இராமன் காடு செல்கிறான். சித்திரகூடத்தில் அவர்கள் தங்குகிறார்கள் இங்கே அயோத்தியில் மாமன் வீட்டிலிருந்து பரதன் வரவழைக்கப்படு கிறான். தாயைக் கண்டபடி திட்டுகிறான். தயரதனின் ஈமக்கடன் முடிந்த பின் காடு சென்று, இராமனை முடிசூட அழைத்துவர முடிவெடுத்து குரு, மந்திரிமார், மக்களோடு புறப்படுகிறான்.

சித்திர கூடத்தில் இராமன் இலக்குவனோடு அமர்ந்திருக்கிறான். அவனுக்கு ஒரு பொருளில் மட்டும் ஐயமே கிடையாது. அது தான் பரதன் ''தள்ளரிய பெருநீதித் தனியாறு புகமண்டும் பள்ளமெனும் தகையான்'' என்பது அயோத்தியில் தந்தை மற்றோரைப் பற்றி அவன் மனம் எண்ணமிட்டுக் கொண்டிருக்கிறது. அருகிலிருந்த இலக்குவன் தூரத்தே புழுதிமண்டலம் எழுவதைப் பார்க்கிறான். உடனே அருகிலிருந்த மரத்தின் உச்சியிலேறிப் பார்த்தவன் ஒரு பெரிய சேனையே வருவது கண்டு இராமனை வனத்தினின்றும் விரட்ட பரதன் வருகிறான் என்று நினைக்கிறான். கீழே குதித்துப் பரதனையும் சேனையையும் அழிக்கப் போவதாகக் கொந்தளிக்கிறான். இராமன் சாந்தமாக இலக்குவனை நோக்கி பரதன் அரசைத் தன்னிடம் (இராமனிடம்) ஒப்படைக்கத்தான் வருகிறான் என்று கூறி அமர்த்துகிறான்.

சற்று நேரத்தில் ''அறந்தனை நினைந்திலை, அருளை நீத்தனை, துறந்தனை முறைமையை'' என்றெல்லாம் அண்ணனை குறை கூற எண்ணி அம்மொழிகளைப் பாராயணம் செய்து கொண்டே வந்த பரதன் அனைத்தையும் ''மறந்தனன், இராமன் மலரடி வந்து வீழ்ந்தனன் இறந்ததன் தாதையை எதிர் கண்டென்னவே''.

வீழ்ந்த பரதனை கண்ணீரால் கழுவி தழுவி எடுக்கிறான் இராமன். அவனை மெல்லத் தெளிவித்து ''அயோத்தியில் தந்தை முதலிய அனைவரும் நலமா''? என்று வினவலும் பரதன் ''தந்தை உமது பிரிவினால் மேலுலகம் எய்தி விட்டார்'' என்று கூறுகிறான். இராமன் தரையில் விழுந்து தந்தையைப் பற்றிப் பலவாறாகப் புலம்புகிறான்.

வசிஷ்டர் முதலோரால் தெளிவு பெற்று இராமன் தந்தைக்குரிய ஈமக் கடன்களைச் செய்கிறான். பின்னர் அங்கு வந்த தாயார் முதலியோருடன் தந்தை இறந்த துக்கத்தைப் பகிர்ந்து கொள்கிறான்.

ஓரிடத்தில் பரதன் முதலிய தம்பியர், வசிஷ்டர், முனிவர்கள் முதலிய மற்றையோருடன் அமர்ந்தவன் பரதனை நோக்கி,

> ''வரதன் துஞ்சினான்; வையம் ஆணையால்
> சரதம் நின்னதே; மகுடம் தாங்கலாய்,
> விரத வேடம், நீஎன் கொல் மேவினாய்?
> பரத! கூறெனா பரிந்து கூறினான்''

உடனே பரதன் பதைபதைப்போடு துள்ளியெழுந்து கண்ணும் கண்ணீருமாய் அண்ணனை நோக்கி, பாவி என் தாய் கொண்ட வரத்தினால் பாவியாகிய நான் சாகவில்லை; தவஞ் செய்யப் போகவில்லை எனக்கேற்பட்ட பழிக்கடலிலிருந்து எப்படிக் கரையேறுவேன்.

> ''பிறந்து நீயுடைப்பிரிவு இல் தொல் பதம்
> துறந்து, மாதவம் தொடங்குவாய் என்றால்
> மறந்து, நீதியின் திறம்பி, வாளின், கொன்று
> அறம் தின்றான் என, அரசு அது ஆள்வெனோ?''

மூத்தவனாகப் பிறந்தமையால் உன்னை விட்டுப் பிரிக்க முடியாததும் தொன்மை தொட்டு வருவதுமான மூத்தவர்க்கரசுரிமையை நீ துறந்து தவம் செய்வாய்! அப்படியிருக்க உன்னுடைய துறவை மறந்து நீதியினின்று திறம்பித் தர்மத்தை வாளினால் வெட்டிக் கொன்றாற் போல நான் அரசாள்வேனா? அண்ணா!

> ''உந்தை தீமையும் உலகுறாத நோய்
> தந்தை தீவினை தாய் செய் தீமையும்
> எந்தை! நீங்க, மீண்டு, அரசு செய்க''

என்று தன் உள்ளத்தில் அடக்கி வைத்திருந்த எண்ணங்கள் அனைத்தையும் தொகுத்து வேண்டுகிறான்.

இராமனுக்கு மிகவும் இக்கட்டான நிலைமை. பரதன் இப்போது தன்னிடம் வரம்வேண்டுகிறான். மறுக்க முடியாது. ஆனால் நீதிப்படி சிக்கல்கள் உள்ளனவே. மரபு உள்ளதே.

இவற்றுக்குப் பங்கமின்றி நடக்க வேண்டுமே என்று வேகமாகச் சிந்தித்து, ஒரு முடிவெடுக்கிறான். பரதனைநோக்கி ''தந்தை கொடுத்த வாக்குகள் பொய்க்கலாகாது. அவரது ஆணைகள் நிறைவேற்றப்பட வேண்டும். எல்லாவற்றையும் ஆய்ந்து நோக்கி முடிவு கூறுகிறேன் கேள். என் முடிவு இது தான்''.

''வரனில் உந்தை சொல் மரபினால் உடைத்
தரணி நின்னதென்று இயைந்த தன்மையால்
உரனின் நீ பிறந்து உரிமையாதலால்
அரசு நின்னதே; ஆள்க'' என்னவே, -

தந்தையின் சொல்படி நீ கைகேயிக்குப் பிறந்த மைந்தன் ஆனதால் அந்த உரிமையில் அரசு உன்னுடையதே. நீ ஆளுதி'' என்று முடிக்கிறான்.

தசரதன் வாக்குப்படி பரதனுக்குக் கிடைத்த அரசுரிமை இராமன் பிறந்ததால் மூத்தவர்க்குரித்த அரசு முறைப்படி அந்த உரிமை தடைப்படுமே என்றாலும், அவ்வுரிமைப்படி, தயரதன் இறந்தவுடன் அரசனாகிய தானே அதை வற்புறுத்தவில்லை என்பது தோன்ற இராமன் ''அரசு நின்னதே'' என்று வரைந்து கூறி நியதிப்படி உள்ள இடைஞ்சலை நீக்குகிறான். ஆகவே அதன்படி எவ்விதப் படாடோபமுமின்றிப் பரதனுக்கு அயோத்தி இராஜ்ய பட்டாபிஷேகம் இராமன் வாக்கு மூலம் சித்திரகூடத்தில் நிறைவு பெறுகிறது. இதன்படி கோசலை 'நானிலம் தம்பிக்கு நீ கொடுத்து' என்று கூறிய ஆணை நிறைவேறுகிறது. கொடுத்து என்பதால் கொடுப்பவனுக்குக் கொடுக்கும் பொருளில் முழுஉரிமை இருக்க வேண்டும். அதன்படி தயரதன் இறந்ததுமே இராமனுக்கு அரச நீதிப்படி அரசுரிமை முழுமையாக வந்து விடுகிறது. பரதனுக்குத் தயரதன் வரத்தினால் வரக் கூடிய உரிமை தயரதன் இறந்த பின் தான் கிடைக்கிறது. ஆனால் இராமனது உரிமையோஅவன் பிறப்புடனேயே ஒட்டியது. இந்த உண்மையைத் தான் முன் நாம்சொன்ன 'பிறந்து நீயுடை பிரிவில் தொல்பதம்' என்ற பதம் காட்டுகிறது. தயரதன் பரதனுக்குக் கொடுத்த வரம் முன்னையதானாலும் இராமனது உரிமை அவனினின்றும் பிரிக்க முடியாததாதலின் அந்நிலைக்கு மாறாக தயரதன் கொடுத்த வரம் செல்லாது. பிறப்புடனே வந்த தன்னுடைய உரிமையை இராமனே வற்புறுத்தவில்லை என்பதைப் பரதன் சொன்ன 'துறந்து' என்ற பதம் காட்டுகிறது, இதன் மூலம் பரதன் அயோத்தி அரசனாகிறான். இராமன் அவ்வரசின் குடிமகனாகிறான்.

'அரசு நின்னதே' என்று இராமன் கூறியதைக் கேட்டபரதன், இராமன் நீதியின் நிலையமாதலின் இப்படி முடிவெடுப்பதற்கு இராமன் சிந்தித்துள்ள அனைத்தையும் உணர்ந்து கொள்கிறான். அயோத்தி மன்னனாக, இராமனாலேயே வாழ்த்து பெற்ற பரதனது உள்ளம் மகிழ்ச்சியால் நிறைவு பெறுகிறது. எனினும் அண்ணன் ஏதேனும் கூறுவதற்கு முன் தான் அண்ணனை மீண்டும் அழைத்து வந்து மகுடம் செய்விக்க எண்ணிய எண்ணத்தை நிறைவேற்று முகமாக, அண்ணா! நீ என்னை அயோத்தியின் அரசன் என்று கூறி விட்டாய் அரசுரிமை இப்போது என்னுடையது. அந்த அரசுரிமையை நான் உனக்கு இப்போது அளிக்கிறேன். ஆகவே நீ தான் அயோத்தியின் அரசன். என்னுடன் வந்து மகுடம் சூடிக் கொள்'' என்று அவன் பாதங்களில் வீழ்ந்து வணங்குகிறான். இராமன் திக்குமுக்காடிப் போகிறான்.

பரதனிடம், முதலிலே மகுடம் சூட வேண்டியவன், ஏன் தவவேடத்தோடு வந்தாய்? என்று கேட்ட போது, பரதன், தன் தந்தையும் தாயும் செய்த கொடுமைகள் நீங்க, நீ வந்து அரசை ஏற்றுக்கொள் என்று கூறிய போது இராமன் ஏன் ஏற்றுகொள்ளவில்லை? காரணம் பரதன் மூத்தவர்க்குரித்து அரசு என்ற முறையில்தான் அப்படிக் கூறுகிறான் என்று இராமன் உணர்கிறான். அந்த முறையில் இராமன்

அதை ஏற்க விரும்பவில்லை. பரதனுக்குத் தந்தை கொடுத்த வாக்குப்படி அரசுரிமை கிடைக்கவில்லை. அவனும் அதை ஏற்றுக் கொண்டு பேசியதாகத் தெரியவில்லை. அந் நிலையில் இராமனுக்கு அரசைக் கொடுக்க பரதனுக்கு உரிமையில்லை. அதனால் அவனை முதலில் அரசு ஏற்று, தான் அயோத்தி அரசன் என்று உணரச் சொன்னால்தான் தந்தையின் வாக்கு நிறைவேறும் என்பதை எண்ணித்தான், முதலில் பரதனை அரசு ஏற்கச் சொல்கிறான். ஆகவே இப்போது பரதன் இராமனுக்கு அரசை ஈந்து கூட வந்து அரசை ஏற்றுக் கொள் என்று கூறும் போது பரதன் அயோத்தி அரசனாகையால் அவனுடைய வாக்கு ஓர் அரசு ஆணையின் தன்மை பெறுகிறது. அதனால் இராமனால் மறுக்க முடியாத நிலை ஏற்பட்டு விடுகிறது. அவன் தயங்குகிறான். வசிஷ்டர் முதலியோர்களும் அயோத்தி சென்று அரசை ஏற்கும்படி வற்புறுத்துகிறார்கள். இராமன் கைகேயி பெற்ற இரண்டாவது வரத்தின்படி 14 வருடம் வனத்தில் உறைய வேண்டும். ''மற்றைய தொன்றும் மற'' என்று இந்த இரண்டாவது வரத்தை விட்டுவிடும்படி தயரதன் வேண்டியும் கைகேயி மறுத்து விட்டாள். அது தவிர கோசலையைச் சந்தித்த பின் ''சிறந்த தம்பி திருஉற'' என்ற பாடலில் ''எந்தையை மறந்தும் பொய்யிலன் ஆக்கி வனத்திடை உறைந்து திரும் உறுதி பெற்றேன்'' என்று தானே சபதம் செய்து ஏற்றுக் கொண்டதால் அதை அவனால் மீறவும் முடியாது. ஆகவே 14 வருடம் வனத்தில் உறைந்து பின் அயோத்தி வந்து அரசை ஏற்றுக் கொள்வதாகவும் அது வரை தன் ஆணையால் பரதன் நாட்டை ஆளும்படியும் கூறுகிறான். இப்போது முன் அயோத்தி அரசனாக இருந்த பரதன் இராமராஜனின் குடிமகனாகிறான். தயங்கித் தயங்கி நிற்கிறான். தேவர்கள் இராமன் வனவாசத்தை முடிப்பதுதான் நலம் என்று கூறுகிறார்கள். வேறு வழியின்றிப் பரதன் இராமனது பாதுகைகளை வேண்டிப் பெற்றுச்சென்று அவற்றை நந்தி கிராமத்தில் ஒரு சிம்மாசனத்தில் ஏற்றிவைத்து அவற்றையே இராமனாகப் பாவித்து அவற்றின் ஆளாக நாட்டை ஆள்கிறான்.

இராவண வதம் முடிந்து இராமன் அயோத்தி வந்து மகுடம்சூடிக் கொள்கிறான். அந்நிலையில் நாட்டின் ஆளுரிமை அவனைத் தானே சாரும். அப்படியானால் அது முன்னால் கைகேயி வரம், தயரதன் வாக்குகள் இவற்றுக்கு மாறாக முடியும். 'நின் மகன் ஆள்வான்' என்பது தயரதன் வாக்கு. 'ஆழி சூழ் உலகெலாம் பரதனே ஆள' என்பது கைகேயி கேட்டுக் கொண்ட வரம். அதில் பரதனே என்பதிலுள்ள ஏகாரம் பிரிநிலைப் பொருளது, பிறர் ஒருவருக்குமின்றி அவனுக்கே ஆக்குகின்றது. அப்படியென்றால் இராமன் அயோத்தியை ஆளமுடியாது. அரசுரிமை இல்லாவிட்டாலும் ஆளுரிமை அவனதாகிறது. இது முரண்பாடு போல் தோன்றுகிறது. ஆனால் இல்லை. நமது நாட்டை உதாரணத்துக்கு எடுத்துக் கொள்வோம். நாட்டின் தலைவர் ஜனாதிபதி. ஆனால் நாட்டை ஆள்பவர் பிரதம மந்திரி. இதை முற்று உவமையாக எடுத்துக் கொள்ள முடியாது. இந்த சிக்கலையும் சமாளிக்க இராமன் முடிசூடியதும் ''பரதனைத் தனது செங்கோல் நடாத்தென பணித்து'' என்று அரசனாகிய தனக்குரிய ஆளுரிமையை பரதனுக்கு அளிக்கிறான். 'பரதனே ஆள' என்ற ஆணையும் முற்றுப் பெறுகிறது.

ஆக தயரதன் கொடுத்த வாக்குகள் அனைத்தும் பொய்யாகாமல் அவனைப் பொய்யிலன் ஆக்குவேன் என்ற இராமன் எடுத்த சபதம் முற்றும் பெற்றமை காண்கிறோம். முன் யோசனையின்றி கொடுக்கும் வாக்குகள், தொன்று தொட்டு வந்த மரபுகள் அரசு நீதிப்படி உண்டான நியதிகள் இவற்றால் ஏற்படும் சிக்கல்கள் அனைத்தையும் உள்ளடக்கி அவற்றை ஒன்றிரண்டு வார்த்தைகளிலே காட்டி, அவற்றை இராமன் எப்படி எளிதாகச் சமாளித்தான் என்பவற்றையும் குறியீடு இட்டு காட்டிய கம்பனின் கவிதா விலாசத்தை மேதா விலாசத்தை என்னென்று போற்றிப்! புகழ்வது! *

# நிலாவில் காணும் நிழல்

திரு. முத்து எத்திராஜன்

வட்ட நிலவே
வாடாப் பூவே
சட்டி நிலாவே
தாமரைப் பூவே
தொட்டிப் பாலே
சோற்றுத் திரளே
எட்டி இருந்தாய்
இனிய விருந்தாய்
வெள்ளித் தட்டே
விண்ணுக் கரசே
பிள்ளை முகமே
பேசுந் தமிழே
உள்ளக் களிப்பே
உலக விளக்கே
அள்ளிப் புரிந்தாய்
அழகு விருந்தே! —

என்று வெண்ணிலாவைப் பற்றிப் புகழ்ந்து பாடுவார் பாவேந்தர் பாரதிதாசனார் அவர்கள். இவர்மட்டுந்தானா நிலாவைப் புகழ்ந்து பாடினார். இத்தரையில் எண்ணற்றத் தமிழ்ப் புலவர்களும் வெண்ணிலாவை வகைவகையாகப் பாடியுள்ளார்களே! ஆனால் அதில் காட்சியளிக்கும் களங்கத்தைப் பாடியவர்கள் ஒரு சிலரே!

நிலாவினில் காணும் கறையை 'மறு' என்று திருவள்ளுவர் (குறள் எண்: 1117) கூறியுள்ளார். பழமொழியாசிரியரான மூன்றுறையரையனாரும் இக்கருத்தினரே! அவரும் பழமொழியில் உள்ள 10 ஆம் பாடலில் 'மறு' என்றே கூறியுள்ளார்.

இவர்களைத் தவிர மற்றையப் புலவர் இக்களங்கத்தை 'முயல்' என்று கூறியுள்ளார்கள். ஆனால் கவிச்சக்கரவர்த்தி கம்பரோ இதை 'முயல்' என்றும் 'மான்' என்றும் இயம்பியுள்ளார். இவை இவருடைய கருத்து என்பதைவிட அக்காலத்து மக்களின் நம்பிக்கை என்பதை நாம் அறிவதுடன் கம்பரின் கருத்து என்ன என்பதையும் காண்பதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

அறிவியலார் கருத்து:

நிலாவில் உள்ள இக்களங்கத்தை (கறையை) இக்காலத்து அறிவியல் அறிஞர்கள் 'மலைகளின் நிழல்கள்' என்றும் 'பள்ளங்களில் காணும் இருள்' என்றும் அறிந்து கூறியுள்ளனர். இக்கருத்தை அப்படியே ஏற்று இன்று வாழும் கவிஞர்களில் ஒருவரான திரு. பல்லவன் அவர்கள்,

''நிலா! நிலா! வாவென—நான்
நீண்டநாளாய் அழைக்கின்றேன்'' என்று

தொடங்கும் பாடலில்,

பள்ளம் மேடு உள்ளதாம்—சிறு
புல்லும் உன்மேல் இல்லையாம்
பள்ளம் இருண்ட பகுதியாம்—சாம்பல்
படர்ந்த நிலமோ மிகுதியாம்''—என்று

பாடியுள்ளார்.

ஆனால் பாமர மக்களோ இன்றும் இக்கருத்தை ஏற்காமல் இந்நிழலை ஆலமரத்தடியில் பாட்டி அப்பம் விற்பதாக கருதுவர். தமிழ்க்கவிஞர்கள் இதை முயல் என்று கூறியுள்ளார்கள். ஆனால் கம்பரோ 'முயல்' என்றும் 'மான்' என்றும் இதைப் பற்றிக் குறிப்பிடுவார்.

முயல்:

கம்பராமாயணத்திற்கு உரைஎழுதியவை. மு. கோபாலகிருஷ்ணமாச்சாரியார் அவர்கள் சுந்தரகாண்டம், ஊர்தேடும் படலத்தில் உள்ள 121 - ஆம் பாடலுக்கு உரை கூறும் போது, சந்திரனிடத்தில் உள்ள களங்கத்தை முயலென்றும் மான் என்றும்

மறுவென்றும் பூச்சாயை என்றும் இங்ஙனம் பலவாறாகக் கூறுவது 'கவிசமயம்' ஆதலால் முயற்கறை என்றார் என்று கம்பர் கூறிய தற்குக் காரணம் சொல்வார். ஆதலால் கம்பர் 'முயல்' என்றும் 'மான்' என்றும் வெண்ணிலாவில் விளங்கும் நிழலை உருவகப் படுத்தியிருப்பது கவிஞர்களின் கருத்து என்று தெளிவாகிறது. இக்கருத்து முதன் முதலில் சங்க இலக்கியத்தில் தென்படுகிறது. அதை நக்கீரர் என்பவர் அகநானூற்றில் உள்ள 141-ஆம் பாடலில் அழகுபட எடுத்துக் காட்டுகிறார்.

உலகு தொழில் உலர்ந்து நாஞ்சில்துஞ்சி
மழைகால் நீங்கிய மாக விசும்பில்
குறுமுயல் மறுநிறங் கிளர மதிநிறைந்து
அறுமீன் சேரும் அகலிரு நடுநாள்''

என்பது அவர் பாடிய பாடலின் வரிகள்.

மழையற்ற காலத்தில் வானத்தில் தோன்றும் வெண்ணிலாவில் காணப்படும் கறையை (மறுவை) குறுமுயல் என்று குறிப்பிடுவதைக் காணலாம்.

அடுத்து, தொல்காப்பியத்திற்குப் பின் தோன்றிய இலக்கண நூலான புறப்பொருள் வெண்பாமாலையும் அம்மறுவை 'முயற்கூடு' என்று கூறுகிறது.

'கயற்கூடு வாள்முகத்தாட் கண்ணிய நெஞ்சம்
முயற்கூடு முன்னதாக் காணின்—உயற் கூடும்
காணா மரபிற் கடும்பகலும் கங்குலும்
நாணாளு மேயா நகை'

என்பது அவ் வெண்பா.

கி.பி. 9ஆம் நூற்றாண்டில் தோன்றிய சீவக சிந்தாமணியும் இம்மறுவை 'முயற்கூடு' என்றே 2284 - ஆம் பாடல் மூலம் நமக்கு எடுத்துக்காட்டுகிறது.

அறுவாய் நிறைந்த அவிர் மதிக்குப்
போல மறுவுண்டோ மாதர் முகத்து

என்ற 1117-ஆம் குறளுக்கு உரையெழுதிய காலிங்கர் என்பவர் அம்மறுவை 'முயற்கை' என்று விளக்கம் தருகிறார். இது அவர் காலத்திலும் முயல் என்ற கருத்து நிலவி யிருந்ததை எடுத்துக்காட்டுகிறது.

முயல் என்று நிலவில் உள்ள நிழலை சங்க காலம் முதல் உரையாசிரியர்கள் காலம் வரை வழங்க, கம்பரோ அதை 'முயல்' என்று கூறியதுடன் 'மான்' என்றும் கூறியிருப்பதால் இருவேறு கருத்துகள் நம் தமிழ் மக்களிடையே அல்லது கவிஞர்களிடையே இருந்து வந்துள்ளன என்பதை நாம் உணர வேண்டியவர்களாக உள்ளோம்.

இனி கம்பராமாயணத்திற்கு வருவோம். விசுவாமித்திரர் இராமனுடைய வரலாற்றையும் அவனுடைய முன்னோர்களின் பெருமைகளையும் கூறுகின்ற போது அம்முனிவர் சனகமகாராசனை 'முயற்கறை இல் மதிக் குடையாய்' (குலமுறை கிளத்துப்படலம்-10) என்று விளிக்கின்றார்.

''முயலென்று சொல்லப்படுகிற களங்கம் இல்லாத வெண்ணிலாவைப் போன்று விளங்குகின்ற வெண்கொற்றக் குடையை உடையவனே'' என்பது இதன் பொருள்.

அடுத்து சுந்தரகாண்டம். இக்காண்டத்தில் அநுமான் இலங்கை மாநகரில் புகுந்து சீதையைத் தேடிக் கொண்டு வரும்போது தூங்கிக் கொண்டிருக்கும் பெண்களைப் பார்க்கின்றார். அவர்களுடைய முகம்.'

'முயற்கறை மலராத் திங்கள் முகத்தியர்' (ஊர்தேடுபடலம் 121) என்று இருந்ததாக உவமை கூறுகின்றார்.

இதன்மூலம் வித்தியாதர மாதர் முகத்துக் களங்கமில்லாத வெண்ணிலா என்ற கற்பனையைக் கம்பர் காட்டுவதைக் காண்கின்றோம். இதே கற்பனையை இயக்கியரான தேவசாதியரின் பெண்களின் முகத்துக்கும் வைத்துள்ளார்.

முயற்கருங்கறை நீங்கிய மொய்ம்மதி
அயர்க்கும் வாள்முகத் தாரமுது
அன்னவர்
இயக்கர் மங்கையர் யாவரும் ஈண்டினார்''

(ஊர்தேடு படலம்-168) என்பன அவ்வரிகள். சனக மகாராசனுடைய வெண் கொற்றக் குடைக்கு முன்பு உதாரணம் கூறியது போல, இராவணனுடைய வெண்கொற்றக் குடைக்கும் அதே உவமை எடுத்துக் காட்டப் படுகிறது.

''வேலை நின்று உயரும் முயலில் வெண்மதியின் வெண்குடை மீதுற விளங்க'' (யுத்தகாண்டம் சேது பந்தன படலம் 10) என்பது அவ்வரியாகும். மேலும் அதே காண்டத்தில் உள்ள இராவணன் சோகப் படலத்தில் உள்ள 50, 51 ஆம் பாடல்களில் அக்களங்கத்தை (மறுவை) 'முயல்' என்றும் 'முயற்கறை' என்றும் குறிப்பிட்டுள்ளார் கம்பர்.

மான்:

இதுவரைக்கும் கவிச்சக்கரவர்த்தி கம்பர் அம்மறுவை 'முயல்' என்று கூறினார் என் பதைக் கண்டோம். அடுத்து 'மான்' என்று கூறியுள்ளதைக் காண்போம்.

யுத்தகாண்டம் மருத்துமலைப் படலம். அப்படலத்தில் உள்ள 94 ஆம் பாடல், அநுமான் சஞ்சீவி மலையை எடுத்துக் கொண்டு வான்வழியில் யுத்த களத்திற்கு வருவதைக் கூறுகிறது. அதில் அநுமான் வானில் வேகமாக வரும்போது அவ்வேகத் தைத்தாளாத நட்சத்திரங்கள் உதிர்ந்து விழு கின்றன. அப்போது பூமியில் உள்ள மான் கள் சந்திரனில் உள்ள உழை (மான்)யைக் கண்டு பயந்து ஓடின என்று சித்தரித் துள்ளார்.

''மீன்குலங் குலைந்துக வெயிலின்
மண்டிலம்
தான்குலைந் துயர்மதி தழுவத்
தன்னுழை
மான்குலம் வெருக்கொள மயங்கி மண்டி
வான்
தேன்குலங் கலங்கிய நறவிற் சென்ற
வால்''

என்பது அப்பாடல்.

அடுத்து, யுத்த காண்டம், நிகும்பலை யாகப் படலம். அதில் இந்திரசித்துக்கும் இலட்சுமணனுக்கும் நடக்கும் போரைப் பற்றிக் கூறுகின்றனர். அப்போரில் இரு வரும் எய்த அம்புகள் எதிரெதிர் படுவதால் வானத்திலிருந்து நட்சத்திரங்கள் உதிர்ந் தன; சூரியனும் வெம்மையை உகுத்திட் டான்; அப்போது வெண்ணிலா தன்னிட மிருந்த மானைச் சிந்தியது என்பதை, மான் உக்கது முழுவெண்மதி (119) என்ற வரி யில் எடுத்தியம்பியுள்ளார்.

இவ்வாறு கம்பர் 'மான்', என்றும் 'முயல்' என்றும் கற்பித்துக் கூறியது அவ ருடைய கற்பனைகள் அல்ல. இவை அக் காலத்து மக்களின் நம்பிக்கையே என் பதைப் பின்வரும் பாடல்களால் நாம் அறி கின்றோம்.

''நீடு நாள்களுங் கோள்களும் என்ன
மேல் நிமிர்ந்து
மாடு தோற்றுவ மலரெனப் பொலிகின்ற
வளத்த
ஓடு மாச்சுடர் வெண்மதிக்குட் கறுப்பு
யர்ந்த
கோடு தேய்த்தலிற் களங்கமுற்றா
லனங்குறிய''

என்பது கிட்கிந்தா காண்டம், மராமரப் படலத்தில் உள்ள 4-வது பாடலாகும்.

சோலைகளில் உள்ள மரங்கள் ஓங்கியு யர்ந்து காணப்படுகின்றன. அத்தகைய மரங்களின் கிளைகள் அடிக்கடி சந்திரன் மீது படுவதால் தழும்பு ஏற்படுகிறது. அத் தழும்பினையே 'களங்கம்' என்று கம்பர் கூறியுள்ளார். இங்கு அவர் அதை முயல் என்றோ 'மான்' என்றோ குறிப்பிடாது

'களங்கம்' என்று கூறுவதிலிருந்து அவர் அதைப்பற்றிய உண்மையை நன்கு அறிந் துள்ளார் எனக் கருத இடமளிக்கிறது.

அடுத்து, இராவணன் சோகப்படலத்தில் வரும் காட்சி இக்கருத்தை மேலும் வலிவுடை யதாக ஆக்குகிறது.

தன்மகன் இந்திரசித்து இறந்து கிடக்கும் போது அவனைப் பார்த்து இராவணன் அழு கின்றான். அப்படி அழும்போது இந்திர சித்துவின் இளமைக் காலத்துச் செயல்களை எல்லாம் அவன் சொல்லிக் காட்டுகிறான்.

''குழந்தைப் பருவத்தில் இந்திரசித்துவே! நீ சந்திரனை நோக்கி அழைக்க, அச்சந்திரன் அச்சத்துடன் வந்து உன்னெதிரில் நின்றான். அப்போது அவனைப்பார்த்து 'பயப்படாதே' என்று சொல்லி அவனை இரண்டு கைகளா லும் ஏந்திக் கொண்டாய்! அப்படிப்பட்ட வீரஇளைஞனே! நீ மீண்டும் அவ்விளை யாட்டினைக் காட்ட எழுந்திருக்க மாட் டாயா!'' என்று கூறுவதாக அமைந்துள்ள பாடலில், சந்திரனிடத்தில் உள்ள நிழலைப் பற்றிக் கூறுகையில், உலகில் உள்ளவர்கள் இக்களங்கத்தை முயல் என்று அழைக்கிறனர். அப்படி அழைக்கும்படி களங்கத்தைப் பெற்றி ருப்பவனே! என்பதை,

'வம்புறு மறுவைப் பற்றி முயலென வாங் கும் வண்ணம்' என்ற வரியில் மிகத் தெளி வாக்கியுள்ளார்.

இப்படிக் கூறுகின்ற கருத்துக்களைக் காணும் போது கம்பருக்கு நிலவில் உள்ள நிழலை முயல் என்றும் மான் என்றும் கருதாதவர். உலகவழக்கையே கவிசமயமாக ஏற்றுக் கொண்டார். உண்மையில் அது 'மறு' (களங்கம்) என்றே கருதியவர். திரு வள்ளுவரின் கருத்துக்கு உடன் பட்டவர் என்பதுடன் இன்றைய அறிவியல் பார்வை அவருக்கு இருந்தது என நாம் கருதுவோமாக!

*

# அன்பிற்கடைக்கலம்

பேராசிரியர் ச. மதனகல்யாணி

வேறொன்றுமில:

| | | | | |
|---|---|---|---|---|
| தனக்குப்பின் | எஞ்சுவ | தொன்றில்லை | தனியுலகில் | |
| இந்நாளைக் | காட்டிலும் | இனிதாவ | தொன்றுமில | |
| அன்புநிலை | தன்னிலும் | அற்புதம் | ஒன்றுமில | |
| விண்ணின்று | இழியும் | மழையால் | வளரும்புல் | |
| என்னுடை | வாழ்நாள் | இவ்விரண்டைக் | காட்டிலும் | வேறில |
| என்காதல் | தன்னிலும் | நெஞ்சுநோதல் | வேறில | |
| ஆயினும் | அவையெல்லாம் | யான்பெற்ற | அன்பாம் | |
| ஆயபற்று | அதன்மேல் | உண்டு. | | |

ழாக் பரோன் (Jacques Baron)

புதுக்கவிதை நடையில் படைக்கப்பட்ட பிரெஞ்சுக் கவிதையின் இம் மொழிபெயர்ப்பு என்னைக் கம்பராமாயணத்தினுள் கொண்டு சென்றது. பிரகலாதனுக்கும் இரணியனுக்கும் நடந்த உரையாடலில் ழாக் பரோன் எடுத்தியம்பிய கருத்துக்களைக் காண்போம்.

இம்மையை மட்டும் கொண்டாடும் ழாக் பரோன் நிலையாமையைப் பற்றி இரண்டாவது அடியில் குறிப்பாக உணர்த்தியுள்ளார். ''நாளை'' உண்டு என்பதை எண்ணாமல் இன்றைய வாழ்வைக் கொண்டாடுவோம். அதில் அன்பைப் போற்றி விந்தைபல செய்வோம். அதற்குக் களமாய் அமைபவை, தானும் தன்னை உள்ளடக்கிய உயிர்களும் ஆகும். அன்பைப் போற்றுவது அவ்விடத்தில் அவ்வளவு எளிதல்ல. வேதனை அடைவதால் அன்பை உதறித் தள்ள முடியாது. ஏனெனில் அன்பையே நாம் (நான், அதாவது இங்கே கவிஞன்) காதலிக்கின்றோம். அது மனிதனின் உரிமை: யான் பெற்ற அன்பு. இது ழாக் பரோன் படைப்பில் அடங்கிய உட்பொருள். நிலையாமை உண்டென்பதால் அன்பைக் கடைப் பிடிப்பதே கவிஞனின் கொள்கை.

இரணியன் வதைப்படலத்தில் பிரகலாதன் தன் தந்தைக்கு இதையே கீழ்க்கண்டவாறு உணர்த்துகின்றான்:

''காலமுங் கருவியு மிடனு மாய்க்கடைப்
பாலமை பயனுமாய்ப் பயன்றுய்ப் பானுமாய்ச்
சீலமு மவைதருந் திருவும் . . .''

காலம்: தனக்குப்பின் ... தொன்றுமில

கருவி : அன்பின்உயிர் ... ஒன்றுமில

இடன்: விண்ணின்று வேறில

பயன் : என்காதல்... வேறில

சீலம் : ஆயினும்... அன்பாம்

திரு : ஆயபற்று... உண்டு

ஆண்டவன் என்பவன் அன்பிற்குரியவன். அன்பிற்குள் ''அடங்கும் ஆண்மையான் ஆகுகின்றான்''. கம்பன் இதையே ''உன்னு யிர்க்குமென் உயிர்க்கும் இவ் வுலகத்தின் உள்ள மன்னு யிர்க்கும்மீது உறுதியென்று'' சொல்கின்றான் — பிரகலாதன் வாயிலாக. உயிரின் கால அளவை வாழ்நாள் என்றும், உலகத்திலுள்ள உயிர்களில் ஒன்றான புல்லைச் சான்றாகக் காட்டி பிரெஞ்சுக்கவிஞன் கம்பனோடு ஒன்றுகின்றான். இதுமட்டுமன்றி அன்பின் வழிசெல்-கையில் அரக்க குணத்தோடு பொரநேர்கையில் நெஞ்சுநோகவும் செய்கின்றது. இராவணன் மேல்கொண்ட பற்றே மாரீசன், கும்பகருணன், இந்திரசித்து ஆகியோரின் வதைக்குக் காரணமாயிற்று. இவர்களை அரக்கன் பலியிடப் போருக்கனுப்பும்போது ஒவ்வொருவரும் ஒவ்வொரு விதமாகப் புலம்பினர் ஒரே கருத்தை வெளிப்படுத்தி.

மாயமானாக மாறப்போகும் மாரீசன் கலக்கமுறுகின்றான்.

''வெஞ்சுற் றநினைந் துகும் .. நஞ்சுற் றுழிமீ னினடுக் குறுவான்
நெஞ்சுற் றதொர்பெற் றிநினைப் பரிதால்''

உலகெலாம் கலக்கி நின்ற இந்திரசித்து இராவணனிடம்,

''சுட்டிய வலியி னாலே கோறலைத் துணிந்து நின்றான்
ஆதலால் அஞ்சினேன்... உன்மேல் காதலால் உரைத்தேன்''

என்று விளக்கிய பின்னரும் கேளாத தந்தையிடம்,

''யான் போய்க் கழிந்தபின் நீ நல்லதைக் காண்பாய்'' என்ற ஒரு நம்பிக்கையோடு போருக்குப் புறப்படுகின்றான்: ''இராவணனைக் கடைக்கண்ணால் நோக்கிக் கலுழப் போனான்''.

இவர்களோடு வீடணனையும், மண்டோதரியும் இணைத்துக் கொள்வோம். இவர்கள் அன்பினால் மனம் வெதும்பிப் போனவர்கள். இவற்றிற்கெல்லாம் காரணம் அரக்கர் தலைவர்கள் அன்பெனும் மெய்ப்பொருளை அறியாமல், செருக்கால் தீமையை நாடியது. இக்கருத்தை ஃபிரான்ஸ் ஹெல்லேன்ஸ் என்பவர் ''நீ உரைத்தாய்'' என்ற கவிதையில் காட்டுகின்றார்.

நீ உரைத்தாய்:

நீயே முன்னுரைத்தாய் என்றுரைத்தாய்
நீயே முன்படைத்தாய் என்றுரைத்தாய்
ஆதியெனும் உற்பவம் என்றவது உண்டோ
இறுதியெனும் முற்றுப் புள்ளியும் ஒன்றுண்டோ
ஒரு துவக்கம்
ஒரு முடிவு
ஆதி எதற்கும் இல்லை
அந்தியும் எதற்கும் இல்லை
எல்லாம் தொடர்வதே
பிறப்பும் இறப்பும்
நுழைவாயிலும் அன்று வெளிவாயிலும் அன்று
வாழ்க்கையுள் நுழைகின்றோம் வெளியேகுகின்றோம்
இளவேனி லினுள்ளே பனிப்பருவம் போன்று
இலையுதிர் பருவத்தினின்று பனிப்பருவம் போன்று வெளியேருகின்றோம்.

ஃபிரான்ஸ் ஹெல்லேன்ஸ் (Franz Hellens)

முதற்பிரெஞ்சுக் கவிதையில் நிலைமையை எடுத்துக்காட்டி குறுகிய வாழ்நாளில் அன்பைக் காதலிக்க வேண்டும் என்று கூறினார். இக்கவிஞன் நிலையாமையினின்று பிறிதான கருத்தைப் படைத்துள்ளான்: நிலையாமையே நிலையானது என்பதுதான். இவன் போன்றே இராமா யணத்தில் கம்பன் எடுத்துக்காட்டிய அடிப்படைக் கருத்துக்களைக் காண்கின்றோம்.

''தாமே தனிநா யகராய் எவையும்
போமே பொருளென்று அபுரா தனர்தாம்
யாமே பரமென் றனர் ......''

இரணியன்வதைப் படலத்தில் பிரகலாதன் கூற்றாக அமையும் இவ்வடிகளை பிரெஞ்சுக் கவிதையின் முன்னிரண்டு அடிகள் பிரதிபலிக்கின்றன. ''நீ'' என்பது இங்கே படர்க்கைப் பன்மையில் பயன்படுத்தப்பட்டுள்ளது.

''தன்னுளே யுலகங்கள் எவையும் தந்ததை
தன்னுளே நின்றுதான் அவற்றுள் தங்குவான்
பின்னிலன் முன்னிலன் ........ போகிலன் .....''

இறப்பு, பிறப்பு, ஆதி, அந்தம் என்பவை தொடர்ச்சியான ஒரு தன்மைத்தே, ஒன்றனுள் அடங்கும் என்பதை,

''பிறிதாயினவோ உலகம், பொன்னின் பிறதாகில பொற்கலனே''

''ஆலமும் வித்தும் ஒத்து அடங்கும்'' என்ற உவமைகளால் கம்பன் விளக்கியுள்ளான்.

......''வரவு, போக்கது
புகுதியில் லாதவர் புலத்திற் றாகுமோ'' இவற்றால் ஹெல்லென்ஸ் ஈற்றடிகளில் விளம்பிய காலத்தின் தன்மையை அறிகின்றோம். வருதலும், இல்லாது போதலும் இரணியன் இராவணன் போன்றவர்களுக்கும், அதாவது அறிவற்றுச்செருக்கில் மூழ்கியவர்க்கும்தாம் என்பது தெள்ளத்தெளிவாகின்றது.

''வீங்கிய பொருளெல்லாம் வேறு காண்பன...
ஓங்கிய தனிநிலை உணரற் பாலதோ''

என்ற கூற்றிற்குத் தக்கவாறு, அடுத்துவரும் பிரெஞ்சுக் கவிதையும் அமைகின்றது: (வெவ்வேறு தன்மையென்றாலும்) உண்மைநிலை என்ற மெய்ப்பொருள் தன்னை அறிவது ஆகும்.

அதற்கு மேலும்:

உண்மைநிலை நம்கையினிடத்துப் பொருந்தியதில்லை என்ப—
தென்னமோ ஏற்றுக்கொள்ளக் கூடியதுதான் - ஆனால்
அன்னதை ஐக்கிய மாக்கியபின் ஏதோ
ஒன்று அதற்கும் மேலுண்டு என்று உணர மாட்டோமோ?
உண்மை நிலைக்கும் மேற்பட்ட ஒன்று உண்டு: அதுதான்
மெய்ம்மை நிலை! அடைந்தால் அதை...

நோர்ழ் (NORGE)

இம்மெய்ம்மை நிலையைப் பலர் பலவிதமாக உணர்ந்தனர். அதனால் பல மதங்கள் உருவாகின. கம்பனின் கைவண்ணம் இரணியன் வதைப் படலத்தில் இவ்வுண்மை நிலையை வரைந்து காட்டுகின்றது.

காலையின் நறுமலர் ஒன்றக் கட்டிய
மாலையின் மலர்புரை சமய வாதியர்
சூலையின் திருக்கலால் சொல்லு வார்க்கெல்லாம்
வேலையும் திரையும்போல் வேறு பாடிலான்.

இன்று சமயப்பூசல்களால் அவதிப்படும் நமக்கு, இது நல்லுரையன்றோ? இதே கருத்தை நோர்ழ் என்ற பிரெஞ்சுக் கவிஞர் நகைச்சுவை ததும்பக் கூறியிருக்கின்றார்.

ரோசா மலரும் மற்றவரும் :

ஓர் எருமை கண்ட ரோசாமலர்.
ஓர் நத்தை கண்ட ரோசாமலர், ஓர் கெண்டை மீன்
ஓர் குயில் கண்ட ரோசாமலர். ஆத்திரோமாக்[1],
பதினோராம் லூய்மன்னன்[2], ஷார்ல்மாஞ்[3], நான்
மேலும் ஓர்ரோசாமலர் கண்ட ரோசர்மலர்! ஆகையால்தான்
ஒருவர் ஒருவரைப் புரிந்துகொள்வது கடினமாகின்றது.

நோர்ழ் (NORGE)

இதன் சிறப்பென்ன வென்றால் ரோசாமலர் மெய்ப்பொருளை உணர்த்துவதால், ஓர் என்ற சொல்லைப் பயன்படுத்தவில்லை. மதத்தை உருவாக்கியவர் ஒருவராகியதால் அவர்களுக்கு மட்டும் ஒருமைச் சொல்லைப் பயன்படுத்தியுள்ளார். அஃறிணை உயிர்களையும் உயர்திணை உயிர்களையும் மெய்ப்பொருள் தன்னை அவரவர் அறிந்தவாறு காட்டியுள்ளது நையாண்டித் தனத்தின் உச்சநிலை எனலாம். இவ்வுயிர்கள் யாவும் மானுடத்தைக் காக்கும் மனிதர்கள். விளக்கம் அதிகம் தேவையில்லை என எண்ணுகிறேன். ஆனால் மதப்பூசல்களை ஒழிக்க ஒரே வழி அன்பிற்கடைக்கலம் தருவதுதான்.

அன்பிற்கு அடைக்கலம்

அன்பிற்கு அடைக்கலம் அளிக்க வேண்டும். ஆகையால் காதலிக்கின்றேன்,
தண்ணென்ற விடியல் வேளையில் தளிர்மண மரங்களை
அன்பிற்கு அடைக்கலம் அளிக்க வேண்டும். ஆகையால் காதலிக்கின்றேன்,
அறிவின் ஆளுமையின்றி
உணர்ச்சிக்குப் புலப்படா ததையும் எதிர்பாரா நிகழ்ச்சி தன்னையும்.
அன்பிற்கு அடைக்கலம் அளிக்க வேண்டும். ஆகையால் காதலிக்கின்றேன்
இந்நிலத்தில் இல்லைஎனா என்றிருக்கக் கூடியவற்றை:
ஆடிவரும் தீவும் தூயஆன்மாவை விளைச்சல் செய்யவிரும்பி
விதைக்கப்படும் கற்களும் கோணல் மாணலையுந்தான்
என்றென்றும் காதலிக்க வேண்டும்: அதை அறிவேன் நான்.
ஊடலுறும் கோளையும், நெருப்பையும், வைக்கோலையும் அருவியின் சீற்றத்தையும்
இம்மறை எனக்குச் செவ்வியது உலகத்தின் மேல் உற்ற காதலால்.

அலேன் போஸ்கேட் (ALAIN BOSQUET)

இதுவே இராமன் என்ற பாத்திரப் படைப்பு:

'அறிவினால் வல்லாரும் நில்லாவுலகின் நிலை உணர்ந்திலராயிருப்பினும்', இவ்வுலகில் பல்லாயிரம் கோடி உயிர்கள் பரந்துள்ளதாதலால், அறிவுக்கு அப்பாற்பட்டவை யாகும். இல்லாதன எனும் இல்லையென்று மாயமான் பின்சென்ற இராமன், குகனிலிருந்து வீடணன் உட்பட தம் உடன்பிறப்புகளையும் சேர்த்து எழுவராகச் சகோதர வட்டத்தை விரிவாக்கிய இராமன், 'இன்றுபோய் நாளைவா' என்று கல்லாய் இறுகிய பகைவன் இராவணனின் அரக்கத்தனத்தை அழிக்கச் சந்தர்ப்பமளித்த இராமன், அன்பிற்கடைக்கலம் தந்தவன் அன்றோ!

ஆனால் இன்று மனிதன் அரக்கத்தனத்திற்கு அன்றோ அடைக்கலம் தந்து கொண்டிருக்கிறான். காந்தி பிறந்த நாட்டிலே ''காந்திதத்துவத்தை'' மறந்தனரே மக்கள்: இவ்வுண்மையைப் பிரெஞ்சுக் கவிஞன் கூற்றால் காணலாம்.

மகாத்மா காந்தி

வாய்கோண வயிறு கிழிய வீதியில்
காய்கறிக் காரணவன் கத்தும்சொல் ஆனதிப்பேர்
தென்திசைக் கோடியில் எங்கோ ஓர் மூலையில்
நுண்மணல் பாலையில் நூற்றாண்டிற் குப்பின்பு
புன்னகை பூக்க வழுக்கைத் தலையுடன்
கண்ணாடி யற்றசட்டம் மூக்கின்மேல் வீற்றிருக்கக்
கண்டுபிடிக் கப்பட்ட ஆய்வுப் பயணிபோல்
இன்றிருக் கின்றாய் நீ யே!
தன்னந் தனியனாய் நின்மக்கள் தன்னோடு
சின்னஞ் சிறுகுடில் உள்ளே இடம்பெற்றாய்
வெற்று நிலத்தையும் வீணான கஞ்சியையும்
உற்றுநோக்கிக் கொண்டிருக்கின் றாய்!
என்றாவது ஓர்நாள் விடியல் வந்துவிடும்
ஒன்றிவிட்ட உன்மக்கள் உள்.
சோர்ந்தநின் கால்கள் சுரணையற்று விட்டன
இற்றைநாள் மாய்த்த இளைஞனாய் நீஎழுந்து
நிற்கின்றாய் என்றும் இனிது.

ரெனே கி கது (Rene' Guy (CADOU)

காந்தி காட்டிய அன்புவழியை இன்று நாம் பொருட்படுத்தாமல் கொன்றுகொண்டிருக்கிறோம். ஆனால், காந்திதத்துவம் என்றும் உலகம் உள்ளளவும், இராமனின் சகோதர வட்டத்துள், நிலைத்து நிற்கும் என்பதைப் பிரெஞ்சுக் கவிஞன் படைப்பில் கண்டு வியப்படையாமல் இருக்க முடியவில்லை.

*

# கம்ப ராமாயணத்தில் விசிட்டாத்வைதம்

திரு. நா. வரதராஜுலு நாயுடு

முன்னுரை

புலன்களால் அறிதலும், அறிதலால் உண்டாகும் உணர்ச்சியும், உணர்ச்சி உந்தும் மனமும், மனத்தின் இயக்கமும் 'சித்' எனப் படும். உயிரும் அதுவே. 'சித்' உடைய பொருள் 'சேதநம்', 'சித்' இல்லாதது 'அசேதநம்'.

சேதநத்துடன் வரலாற்று அறிவும் பெற்றிருப்பது மனிதகுலத்தின் சிறப்பு. அவ் அறிவால், மனிதன் தானும், தன் இனமும், பிற உயிர் இனங்களும், இயற்கைச் சக்திகளும், சூழ் நிலையும், நாளடைவில் அடைந்த மாறுபாடுகளை அளந்து, ஆய்ந்து, அவற்றின் காரணங்களை அறிய முயல்கிறான். ஆராய்ச்சியின் விளைவாகச் சிந்தனை விரிகிறது: ஒருமைப்பாடும், முரண்பாடும், முரண்பாட்டைத் தீர்ப்பதும் அறிவு வளர்ச்சியின் அறிகுறிகள். அறிவு வளரச் சமூகம் மாறுகிறது; சமூக மாறுதல் அறிவு வளர்ச்சியைத் தூண்டுகிறது.

ஆய்வுக்கு அறிவும் அளவையும் இன்றி அமையாதன. ''அளவையான் அளப்ப அரிது; அறிவின் அப்புறத்தது'' (6250) என்ற எண்ணக்குலைவு நேரிட, மனிதன் புது அறிவையும், புது அளவைகளையும் நாடுகிறான்; அன்றி, ஊகக் கற்பனைகளைத் துணைக் கொள்கிறான். ஊகக் கற்பனையும் அறிவு-அளவைகளை ஊக்குவது உண்டு. 'அறிதோறு அறியாமை'யைக் காண்கிறான். ''சான்றுக்குச் சான்று'' (10055) தேடுவதும், ஒப்புக்கொள்வதும், மறுப்பதும், திருத்துவதும் அன்றாடச் செயல்கள்.

நம் நாட்டில், வேதகால இருடிகள் உலகின் தோற்றம், வளர்ச்சிகளை அடிப்படையிலிருந்து ஆராய்ந்து தம் முடிவுகளைப் பொதிந்து வைத்த நூல்கள் உபநிடதங்கள். அவற்றை வேதங்களின் சிகரங்கள் என்பர். சூத்திர உருவில் இக்கருத்துக்கள் பிரம சூத்திரங்களில் காணப்படும். இவை தோன்றிய பின்பு, அக்கால அறிவு வளர்ச்சியின் திரட்சியாகத் தோன்றியது கண்ணன் அருளிய கீதை. இவை மூன்றையும் இந்துக்கள் மூலச் சான்றுகளாகக் கருதுவர்.

இவற்றுக்கு உரை கண்டு, இவற்றை முழுமையாக, ஆய்ந்து ஆய்வுமுறையை வகுத்து, ஐயம் திரிபுகளை நீக்கி, மறுப்புக்களை மறுத்து, கொள்கையை அறுதி செய்து, குறிக்கோளை நிறுவி, அதை அடையும் வழியையும் வகுத்தவர் சங்கரர். அவருடைய கோட்பாடு 'அத்வைதம்' (இருமை அன்மை) என்ற 'வேதாந்தம்' (வேதத்தின் முடிபு). இதன் மூலநூல்கள் யாவும் வடமொழியில் உள்ளன.

தமிழ் நூல்களில் அத்வைதத்தின் தாக்கம் பிற்காலத்தில் தோன்றியது. சங்கரர் காலத்திலும், அதற்கு முன்பும், வாழ்ந்த ஆழ்வார்களுடைய பாடல்களிலும், பரிபாடல் போன்ற சங்க இலக்கியத்திலும் அத்வைதத்தினின்று வேறுபட்ட கருத்துக்கள் உள்ளன. ஆழ்வார்கள் பாடல்களைத் தொகுத்து அளித்த நாதமுனியும், அவருடைய சீட பரம்பரையில் வந்த ஆளவந்தாரும், இராமாநுசரும் ஆழ்வார் பாடல்களின் துணை கொண்டு முன்பு குறிப்பிட்ட மூலச் சான்று நூல்களை ஆராய்ந்தனர். அப் பரம்பரையில் பிற்காலத்தே வந்த வேதாந்த தேசிகன் ''இவர்கள் (ஆழ்வார்கள்) மகிழ்ந்து பாடும், செய்ய தமிழ் மாலைகள் நாம் தெளிய ஓதித் தெளியாத மறைநிலங்கள் தெளிகின்றோமே'' எனத் தமிழ் தந்த உதவியைப் பாராட்டுகிறார்.

''ஆயாத சமய''மும் உள; அவை நின் (இறைவனின்) அடியவே; அயல் இல்லை'' (2569)

இராமாநுசர் நிறுவிய கொள்கை ''விசிட்டாத்வைதம்'' (விசிட்ட — உயர்ந்த, சிறந்த). அக் கொள்கையின் பல கூறுகள் அவருக்கு முன்பே பல நூல்களுள் சிதறுண்டு கிடந்தவேனும், அவற்றை முறைப்படுத்தி, வகுத்து அளித்தவர் இராமாநுசர் ஆதலின், இது இராமாநுச சித்தாந்தம் என வழங்கு கிறது. 'விசிட்டாத்வைதம்' என்ற பெயரும் அவர் இட்டதன்று; அவருடைய சீட பரம்பரையில் அவருக்கு ஏறத்தாழ 200 ஆண்டுகளுக்குப் பின்பு வந்த சுதர்சனசூரியும் வேதாந்த தேசிகனும் சூட்டிய பெயர்.

கம்பன் காவியத்தில் இக்கொள்கையின் தாக்கத்தைக் காண்பது இக் கட்டுரை. கம்பன் எந்தக் கடவுளை முதல்வனாகக் கொண்டார் என்பதோ, அவருடைய காலத்தை ஆய்வதோ, இதன் நோக்கம் அன்று.

பாட்டு எண் சென்னை கம்பன் கழகப் பதிப்பில் காண்பது.

### "உலகம் யாவையும்"

கம்ப ராமாயணப் பாயிரத்தின் இம் முதல் பாடல் 'சீபாடியக் கொண்டல்' எனப் புகழ் பெற்ற இராமாநுசர் அருளிய பிரம சூத்திர பாஷ்யத்தின் முதலில் உள்ள மங்கள சுலோகத்துடன் ஒப்புமை கொண்டது. அந்த சுலோகம்

> ''அகில புவந ஜந்ம ஸ்தேம பங்காதி லீலே
> விநத விவித பூத வ்ராத ரக்ஷ ஏக தீக்ஷே!
> ச்ருதி சிரஸி விதீப்த ப்ரஹ்மணி ஸ்ரீ நிவாஸே
> பவது மம பரஸ்மிந் சேமுஷீ பக்திரூபா!!

'அகில புவன'—'உலகம் யாவையும்'
'ஜந்ம ஸ்தேம பங்காதி'—'உள ஆக்கலும், நிலை பெறுத்தலும், நீக்கலும்' முதலான
'லீலே'—'விளையாட்டு' உடையாய்.

முதல் அடி ''உலகம் யாவையும் தாம் உள ஆக்கலும், நிலைபெறுத்தலும், நீக்கலும், நீங்கலா அலகிலா விளையாட்டு'' என்ற பொருள் தருகிறது. இரண்டாம் அடி ''வணங்கிய பலவகை உயிர்த் தொகுதி களையும் காப்பதே விரதமாகக் கொண்ட வரே'' எனப் புகல் அடைந்தவரைக் காத்தல் கூறும். மூன்றாம் அடி ''மறை முடியில் ஒளிரும் பெருமை மிக்க, திருவுக்கு உறை விடமானவனே'' என்றும் நான்காம் அடி என் அறிவு – ஆய்வு—ஆற்றல் சிறந்த பக்தி வடிவாக அமையக் கடவது என்றும் பொருள் தருகிறது.

இறைவனுக்கு உலகம் ஒரு 'விளையாட்டு' என்ற கருத்து பண்டைக் காலத்திலிருந்து தொடர்வது ஒன்றே. பிரம சூத்திரத்தில் ''லோகவத் து லீலா கைவல்யம்'' (2.1.33) என்பதற்கு 'உலகில் காணப்படுவ போன்று, பிரமத்துக்கு உலகப் படைப்பு ஒரு விளை யாட்டு'' என சங்கரரும் இராமாநுசரும் உரை கொள்கின்றனர். விளக்கமாக, இறை வன் எவரிடமிருந்தும் எப்பயனும் எதிர்பார்க்க வேண்டியதில்லை; வேண்டுவன எல்லாம் அவனிடத்தே உள்ளன; அவனுக்குத் தேவை கள் ஏதும் இல. ஆக்கத்திற்குக் குறிக்கோள் இன்றி, காரணம் இன்றி, பயன் கருதாமல் தானாகவே இவ் உலகைப் படைக்கிறான்; ஆகவே, அது ''விளையாட்டு''. இராமாநுசர் 'உலகில் பல துன்பங்கள் உள்ளனவே; உயர்வு-தாழ்வுகள் உள்ளனவே: கருணா கரன், அறமூர்த்தி எனப்படும் இறைவன் இக்கொடிய, பக்ஷபாதச் செயல்களைத் தன் விளையாட்டுக்காகச் செய்கிறான் என்பதை எவ்வாறு ஏற்க முடியும்?' என்ற எதிருரையை எழுப்பி அதற்குச் சமாதானமாக, அடுத்த சூத்திரத்தையும், பிருகதாரண்யக உபநிஷத் (3-2-13) வாக்கியத்தையும் காட்டுகிறார்: ''ஒருவனுடைய பிறப்பு, நல்குரவு-செல்வம், உடல் நலன் - நோய், கைதவம் - செம்மை, போல்வன அவனவனுடைய வினைப்பயன். அவற்றை இறைவன் வகுக்கவில்லை. ஒரே

மழை வெவ்வேறு விதைகளைப் பலவகைப் பயிர்களாக, பலவகைத் திறனோடு, முளை விப்பது போல, ஒரே கருணை பல விளைவு களைத் தருகிறது. அதில் கொடுமையோ, பக்ஷபாதமோ இல்லை'' என்பது சங்கர ருடைய வாதமும் அதுவே.

இறைவனைக் குற்றம் சாட்டுவது தவறு என்ற கருத்தும் தொனிக்கிறது.

'லியர் அரசன்' என்ற ஷேக்ஸ்பியர் நாடகத்தில் ஒரு பாத்திரம்

"As flies to wanton boys, are we to th' Gods,
They kill us for their sport" 4.1.36

(சிறு பிள்ளைகள் குறும்புக்காக ஈக்களைத் துன்புறுத்துவது போல, கடவுளர் அவர் களுடைய விளையாட்டுக்காக நம்மைக் கொல் கின்றனர்). அவல நாடகத்தின் இறுதியில், வேறொரு பாத்திரம்

'The Gods are just, and of our pleasant vices
Make instruments to plague us''. 5.3.173

(கடவுளர் நீதி காப்பவர்; நாம் இன்பம் கருதிச் செய்யும் பிழைகளையே அவர்கள் நம்மை வாட்டும் கருவிகளாகப் பயன் படுத்து கின்றனர்).

இராமன் அவதரித்தது ''அறம் காத் தற்கு'' (2565) எனினும், அவன் ''இறப்பதே, பிறப்பதே, எனும் விளையாட்டு இனிது உகந்தோன்''. (2566)

திருமந்திரம்

விசிட்டாத்வைதிகள் சிறப்பாகப் போற் றும் திருமந்திரம் எட்டெழுத்துக்களைக் கொண்ட ''ஓம் நமோ நாராயணாய'' என்பது. இம் மந்திரத்தை விளக்கிப் பல நூல்களை பல ஆசார்யர்கள் இயற்றினர் எனினும் மந்திரத்தை மூலநூல்களோ, அவற்றின் உரைகளோ, வடமொழியிலோ தென்மொழி யிலோ, கம்பன் காலம் வரை முழுமையாகக் கூறவில்லை. ஆழ்வார்களும், ''நின் திருவெட் டெழுத்தும் கற்று'', ''நாடு நகரமும் நன்கறிய நமோ நாராயணாய'' 'நாராயணா என்னும் நாமம்'' என்பன வற்றோடு நின் றனர். பல ஸ்ம்ருதி புராணங்களை ஆராயும் தேசிகனும் இதற்குச் சான்று. ''ஓம் நமோ நாராயணாய'' என்று முழு வடிவமும் இலக் கியத்தில் பயிலும் இடம் கம்பராமாயணம் (6211)

கம்பன் முந்தையோர் மரபை மாற்றி னானா? அன்றி, அவருக்கு முன்பே அம் மரபு மாற்றப்பட்டிருந்ததோ?

குருபரம்பரையில் ஒரு செய்தி நினைவு கூறத்தக்கது.

திருமந்திரமும் அதன் பொருளும் வட மொழியில் இருந்தன. ஓர் ஆசார்யன் தக்க காலத்தில், தக்க சீடனைத் தேர்ந்து, அவற்றை அவனுக்கு உபதேசிப்பது மரபு. ஆளவந்தார் என்னும் ஆசார்யர் இராமா நுசரைத் தேர்ந்தெடுத்தார் எனினும், இராமா நுசர் அவரிடம் வந்து அதைப் பெற்றுக் கொள்வதற்குள் ஆசார்யர் வீடுபேறு எய்தி னார். ஆளவந்தார் திருக்கோட்டியூர் நம்பி என்ற ஆசார்யரிடம் மந்திரத்தையும் அதன் பொருளையும் இராமாநுசருக்கு அருளுமாறு ஒப்புவித்திருந்தார். அதை அறிந்த இராமா நுசர் பன்முறை நம்பிகளிடம் நடந்து அம் மரபைக் காப்பதாகச் சூளுறுதி பூண்டு அவற்றைப் பெற்றார். பெற்றதும், அவ்வூர்த் திருவிழாவில் கூடி இருந்த மக்கள் அனை வர்க்கும் கோபுரத்தில் ஏறி நின்று வெளி யிட்டார். கடும் கோபம் கொண்ட நம்பிகள் அவரை அழைத்துக் கேட்ப, இராமாநுசர், ''சூள் பொய்த்ததற்காக நான் நாகம் புகினும் கேட்ட அனைவரும் வீடு எய்துவர் அன்றோ?' என உரைக்க, நம்பிகள் உவந்து அவருக்கு ' பெருமானார்'' என்ற பட்டம் சூட்டினார்.

எனினும், இராமாநுசரோ அவருக்குப் பின்பு வந்த ஆசார்யர் எவருமோ திருமந்திரத்துக்கு உரை வகுத்தனரே அன்றி கம்பனைப் போல மந்திரத்தின் முழு உருவை எங்கும் கூறவில்லை.

மந்திரப் பொருளைக் கம்பன் கையாளுவதைப் பார்ப்போம்,

பிரணவம்

ஓங்காரம் பிரகலாதன் கூற்றாக ''ஓம் என்னும் ஓர் எழுத்து அதனின் உள் உயிர் ஆம் அவன்'' (6264), பிரமன் கூற்றாக, ''ஓங்காரப் பொருள்'' (10061), கவிக் கூற்றாக ''உயிர்களின் முதலில் வைத்த ஓர் எழுத்தினன்'' (9856) எனப் பல இடங்களில் போற்றப்படுகிறது.

வால்மீகத்தில், தொடக்கத்தில் நூலுக்குப் புறம்பாக பிரணவம் உள்ளது; நூலுள் இல்லை. அதன் பெருமையும் கூறப்படவில்லை.

பிரணவம் 'அ', உ', 'ம' என்ற மூன்று எழுத்துக்களைக் கொண்டது (அ+உ=ஓ). அவை முறையே இறைவனையும், பிராட்டியையும், சேதனனையும் குறிக்கும் என்பர்; அன்றி, 'உ' இறைவனையும் சேதனனையும் இணைக்கும் உருபு எனவும் கொள்வர். ஆனால், துளசிதாசர் 'உ' இறைவனையும் சேதனனையும் பிரிக்கும் 'மாயை' என்பார் (2.123;3.9).

பிரணவத்தின் விரிவாக்கம் திருமந்திரம்.

இராமனும், சீதையும், இலக்குவனும் காட்டுக்குச் சென்றதைக் கூறும் குலசேகராழ்வார் பாசுரப் பகுதி ''நேரிழையும், இளங்கோவும் பின்பு போக'' (9-2). அதன் உரை ஆசிரியர் 'பிரணவம் கால் கொடு நடந்ததிரே' என வியக்குகிறார்: அ-இராமன் (இறைவன்), உ-சீதை, ம-இலக்குவன் (சேதநன்). கம்பன் இம்முறையை ''பொய்யோ எனும் இடையாளொடும் இளையானொடும் போனான்'' (1926) என்ற இடத்துக் கூறுகிறார் எனினும், ''சீரை சுற்றித் திருமகள் பின் செல, மூரி விற்கை இளையவன் முன் செலக், காரை ஒத்தவன் போம் படி (1835) என்ற இடத்து முறை மாறும். இம்முறைப் பிறழ்வுகள் வால்மீகத்திலும் உள.

(துளசியின் அழகிய, பக்தி சொட்டும், கற்பனை குறிப்பிடத்தக்கது. பின் சென்ற இலக்குவன் முன் சென்ற சீதை இராமனின் திருவடிச் சுவடுகளை அழிக்க மனம் இன்றி, அகலச் சென்றான் (2-125)

நாராயண

கம்பன் காவியத்தில் பல இடங்களில் 'ராம' நாமத்தின் பெருமையைக் கூறுகிறார். அவற்றுள் சில:

வதிட்டன்: ''அனையான் (இராமன்) பேரினால் வரும் இடைபூறு பெயர்கின்ற பயம்'' (பயம்-பயன்) (1351)

சம்பாதி : ''எல்லீரும் அவ் இராம நாமமே சொல்லீர்; சொல்ல எனக்கு ஓர் சோர்வு இலா நல் ஈரப்பயன் நண்ணும்'' (4795)

அனுமன் : ''அரக்கர் புரி தீமை அவை தீர, ஏறும் வகை எங்குளது? 'இராம' என எல்லாம் மாறும்'' (4828)

'நாராயண' நாமத்தின் பெருமையைத் தெரிவிக்க அவர் வகுத்துக் கொண்டது இரணிய வதைப் படலம்.

இரணியன் பிரகலாதனைத் துன்புறுத்திய போதெல்லாம் அவனைக் காத்தது பெயரே.

''அரி' என்று தொழுது நின்றனன் நாயகன் தாள் இணை; குளிர்ந்தது சுடு தீயே''
(6273)

எட்டுப் பாம்பும் கடித்தன, துடித்திலன்
திருப் பெயர் மறவா தான்'' (6276)

''வெள்ளத்து இட்டிட, ஆதிப் பண்ணவன்
ஆயிர நாமம் ஒதுற்றான்'' (6291)

'நாராயண' என்ற சொல்லின் பொருளை விளக்கும் இடங்கள் பல.

'நாராயண' என்ற வடசொல் 'நார' 'அயந' என்ற இரு சொற்களின் சேர்க்கை. 'நார' என்ற சொல் 'நர'வினின்று எழுந்தது: ''அழியாதன ஆகிய உயிர், ஆற்றல், அறிவு, நுண்-கரு-பருப் பொருள்கள், இயற்கை, உலகு, சேதனம், அசேதனம் போன்ற அனைத்தின் தொகுதி. 'அயநம்' இருப்பிடம். 'நாராயண' நாரங்களுக்கு இருப்பிடம் என நான்காம் வேற்றுமைத் தொகை, அன்றி, 'நாரங்களை இருப்பிடமாக உடையவன் என்ற அன்மொழித் தொகையாகவோ விரியும் இக்கருத்து பொது,

உயிர்கள் 'சேதந'ங்கள்; உயிர் அல்லன 'அசேதந'ங்களும் பல; இறைவன் அவற்றினின்று வேறுபட்டவன். (இது விசிட்டாத்வைதம்) ஆனால், அவற்றுள் உறைபவன்; அவற்றை ஆள்பவன். நடத்துபவன் அவற்றை இயக்கும் வினையும் இயக்கத்தின் பயனும் இறைவனைச் சாரா.

இக்கொள்கைகளை ஒட்டி, மனிதனுக்கும் இறைவனுக்கும் உள்ள தொடர்பு பற்றி பல கருத்துக்கள் எழுந்தன. இவற்றைக் கம்பனில் காண்போம்.

உயிர்கள் பல: ''பூதங்கள் எண் இல'' (6231)

உயிர்கள் வேறானவை: ''உன் உயிர்க்கும், என் உயிர்க்கும்

இவ் உலகத்தின் உள்ள மன் உயிர்க்கும்'' (6234) உயிர்கள் நிலை பெற்றவை, அழியாதன: ''மன் உயிர்'' பல இடங்களில் தோய்ந்திருத்தல், இருப்பிடமாகக் கொளல்:

''மலரினில் மணமும், எள்ளில்
எண்ணையும் போல, எங்கும்
அலகு இல் பல்பொருளும் பற்றி முற்றிய
அரி காண்'' (6308)

''தோய்ந்தும், பொருள் அனைத்தும்
தோயாது நின்ற சுடரே'' (2613)

''கண்ணினும் கரந்துளன், கண்டு
காட்டுவார்
உள் நிறைந்திடும் உணர்வாகி உண்மை
யால்'' (6259)

''சிந்தையின், செய்கையின், சொல்
லின், சேர்ந்துளன்
இந்தியம் தொறும் உளன்'' (6260)

தாங்குதல்

''தன்னுளே' உலகங்கள் எவையும்
தந்து, அவை
தன்னுளே நின்று, தான் அவற்றுள்
தங்குவான்'' (6249)

(தன் உளே - தன் உள்ளத்தில்
தன்னுள்ளே - தம்முள்)

'உளே' என்பதன் பொருள் வேறோர் இடத்தில் விளங்கும்.

''அளப்பரும் உலகம் யாவும் அமைத்து,
காத்து, அளிக்கின்றான் தன்
உளப் பெரும் தகைமை தன்னால்
ஒருவன்'' (9630)

''விரித்த எல்லாம்
மாட்டுவான் ஒருவன் அன்றே இறுதியில்
மனத்தால்'' (9629)

அமைத்தல், காத்தல், அழித்தல் எனும் முச்செயல்களையும் உளத்தால் (மனத்தால்) செய்கிறான். இது வேதக்கருத்து, ''ததா லோகாஞ் அகல பயந்''- புருஷஸூக்தம் 1-75

''ஒண்தொடியாள் திருமகளும் தானும்
ஆகி

ஒரு நினைவால் ஈன்ற உயிர்''
(வேதாந்த தேசிகன்)

இதை வடநூலார் 'ஸங்கல்ப ஸ்ருஷ்டி' என்பர்.

கம்பன் முதற்பாட்டில் 'உள ஆக்கல்' என்ற தொடரையும் இவ்வாறே கொள்ள வேண்டும். 'உலகம் யாவையும்' என்றும் உள்ளனவே. அவற்றைப் புதிதாக ஆக்குவதில்லை; அழிக்கவும் முடியாது. இறைவனைப் போலவே, பொருளும் (Matter) ஆற்றலும் (Energy) ஆதி அந்தம் அற்றவை. அதன் நிலை மாறும்: உள்ளனவற்றின் 'ஆக்கம்' தோற்றத்தில் நிகழும் மாறுபாடு. 'நீக்கம்' மறைவில் நிகழும்மாறுபாடு. தோன்றும் போது உண்டாகும் மாறுபாட்டைப் 'பிறப்பு' என்றும், மறையும் போது உண்டாகும் மாறுபாட்டை 'இறப்பு' என்றும் சொல்கிறோம். இது மக்களுக்கும், சமூகங்களுக்கும், அவருடைய அன்றி அவற்றின் செயல்களுக்கும், பொருந்தும்.

உடலும், உயிரும்

''மொய்ம்பினன்
உயிர் எலாம் தன் உயிர் ஒப்ப ஓம்பலால்,
செயிற் இலா உலகினில் சென்று நின்று வாழ்
உயிர் எலாம் உறைவது ஓர் உடம்பும் ஆயினாள்'' (171)

என்பது தசரதனுடைய ஆட்சியைக் கூறும் பாட்டு. இதில், தசரதன் உடலாகவும், நாட்டு மக்களும், வாழ்வன பிறவும் உயிராகவும் கூறப்படுகின்றனர்.

உயிர் நுண் பொருள்; அதை நாம் அறிவது உடலின் பருப்பொருளின் இயக்கத்தால்; உயிர் இல்லா உடல் இயங்காது. உடலை நிலை குலையாமல் காப்பது உயிர்; உயிரைத் தாங்குவது உடல். தசரதனை நீத்த அயோத்தி ''ஆவி நீத்த உடல் எனல் ஆயதே'' (2128)

தசரதன் உடல் என்ற கருத்து தொடர்கிறது: சடாயு புலம்பல்: ''நீ உடல், நான் ஆவி''. 'உயிர் கிடக்க உடம்பை விசும்பு ஏற்றினார்' (2712) வதிட்டன் வாக்கிலும், இதே கருத்து தோன்றுகிறது.

''வையம் மன் உயிர் ஆக, அம் மன் உயிர்
உய்யத்தாங்கும் உடல் அன்ன மன்னவன்'' (1423)

ஆனால், கம்பன் பரம்பொருளாகக் கொண்ட இராமனைக் கூறும் இடங்களில் இராமன் உயிர்

''ஓவல் இல் உயிர்பிரிந்து உடல் சென்றென் எனவே'' (1310)
(இங்கு உடல் பரதன்)

''உடம்பு உயிரைத் தொடர்கின்றது ஒத்தாள்'' (1249)
(இங்கு உடல் சீதை)

''மன்னன் இன் உயிர் வழிக் கொண்டால் என்'' (334)

''இன் உயிர் யார்க்கும் ஒன்றாய், பொருவரு தேரில் செல்லப் புறத்திடை கண்டார்''
(1577)

''உயிரினைக் கண்ட உடல் தான் அது
கவர்வுறும் தன்மைத்து'' (10009)

(இங்கு உடல் சீதை; 'அது'-உயிரை, இராமனை)

ஓரிடத்தும் இராமன் உடல் எனக் கம்பன் கூறவில்லை. பரம்பொருள் உயிர்; உடல் அன்று.

''உலகு உடம்பாய்த் தாம் உயிராய் நின்றார் வந்தார்'' (தேசிகன்)
''நாராயணன் பரன், நாம் அவர்க்கு நிலை அடியோம்,
சோராது அனைத்தும் அவன் உடம்பு
என்னும் சுருதிகளால்'' (தேசிகன்)

உடல் 'தார்யம்' தாங்கப்படுவது; மக்கள் பிராணிகள் (சேஷ) அடிமைகள்; உயிர் 'தாரகம்' தாங்குவது; இறைவன் (சேஷி) ஆண்டான், என்பது விசிட்டாத்வைதக் கருத்து.

தலைவன் சேனைக்கு உயிர் என்பதை ''எழுபது வெள்ளம் யாக்கைக்கு ஓர் உயிர் (6727) எனச் சுக்கிரீவனைக் குறிப்பிடுவதி லும் காணலாம்.

'கோன் நிகர் குடிகள்' (126)

கோசலத்தில் ஒவ்வொரு குடிமகனும் அரசனை ஒத்திருந்தான்; ஒவ்வொருவனிடத் தும் கோன்மை குடிகொண்டது என்பது கம்பன் வாக்கு.

'' ஸ தம் புருஷம் உளபதி திவ்யம் '' (கீதை 8-10) என்ற தொடருக்கு இராமா நுசர் ''பரமபதத்தில் நித்யசூரிகள் போலே அவன் இறைவனுடைய தன்மையைப் பெறு கிறான். அவனுக்கு இறைவனுக்குச் சம மான தலைமைத் தன்மை உண்டாகிறது; இறைவனோடு ஒத்த உருவினராக, அவனு டைய தோழராக, தாம் விரும்பும் பணி செய்து இன்புறுவர்'' என உரை இடுகிறார்.

''மெய் நெறி நன்மையன்'' (3)

மெய்-உரு; நெறி-வழி; நன்மை-பெற விழையும் குறிக்கோள். இவற்றை, வட மொழியில் ஸ்வருப - உபாய - புருஷார்த்தம் என்பர். இம்மூன்றும் இறைவனே எனக் கம்பன், அவன் 'பாதம் அல்லது பற்றிலர் பற்றிலார்' என்கிறார்.

''வேள்வியும், மெய்யும், தெய்வ வேதியர் விழையும் அஃதே'' (8180) என்பது இக் கருத்தின் தொடர்ச்சி.

குணங்கள்

இறைவன் குணமிலி அலன். இயல் பாகவே, எண்ணற்ற, உயர்ந்த, மங்கள குணத் தொகுதிகளின் பெருங்கடல் என இராமாநுசர் அக்குணங்களைக் கத்யத்தில் வர்ணிக்கிறார். வால்மீகியும், பதினாறு சிறந்த குணங்களை உடைய மனிதன் ஆகிய இராமனின் வாழ்க்கையைக் காரியம் ஆக்கு கிறார்.

கம்பன் பாயிரத்தில் 'சித் குணத்தவர்' (அறிவின் திறம் முற்றியவரும்) 'தெரிவரு' (ஆராய்தற்கு அருமையான) 'நல் நிலை' (அனைவருக்கும் நன்மை பயக்கும் நிலைமை 'எற்கு உணர்த்த அரிது'; 'எண்ணிய மூன்ற னுள்' (சத்துவம் - மாறாத ஒளி நிலை, ராஜஸம் - மாசுபட்டு மங்கிய நிலை, தாம ஸம்-இருள், அறியாமை நிலை) இவற்றுள் 'முற்குணத்தவரே முதலோர்' (சத்துவ நிலை யினரே தலைவர்) என 'அவர் நற்குணக் கடல் ஆடுதல் (தோய்தல், திளைத்தல்) நன்று அரோ' என்கிறார்.

இராமனைப் பரம்பொருளாகக் கருதித் தொழுத இந்திரனும், ''நான்முகனார் தாமே, ஊழி பல பலவும் நின்று அளந்தால் உலவாத பெருங்குணத்த உத்தமனே'' (2615) என் கிறார். ஆனால், ''குணம் ஏதும் இலாய்'' (6292) இக்கருத்துக்கு இடர் தருகிறது.

இவை இறைவனைக் கூறுவன. அவதார குணங்களாக, எளிமை, அடைக்கலம் காத்தல் போன்ற 'குணங்களால் உயர்ந்த வள்ள' (479)லைப் போற்றுவது வேறு.

'அமலனாதி பிரான்'

இது பி. ஸ்ரீ. சொன்னது.

இராமன்-சூர்ப்பணகை உரையாடல் நகைச்சுவை உடையது. இது போன்ற, ஆழ்ந்த சிந்தனை அற்ற மனப்போக்கை இராமனிடம் காவியத்தில் வேறு எங்கும் நாம் காண்பதில்லை. இராமனும்,

''வளை எயிற்றவர்களோடு வரும்
விளையாட்டு என்றாலும்,
விளைவன தீமையே ஆம்'' (3798)

என்பதை உணர்ந்தான். அவ்விளையாட்டின் அப்போதைய விளைவுகள் சூர்ப்பணகை சீதையைத் தொடர்ந்ததும், இலக்குவன் சினந்து அவளுடைய 'மூக்கும் காதும் வெம் முரண் முலைக்கண்களும் போக்கி'யதும். அவள் ஓலமிட்டு, ''கானை, உங்கள் கூற்றுவனை, இப்போதே கொணர்கின்றேன்' என்று சலம் கெண்டு போனாள்'' (2874); அந்தகன் தூது என அரக்கருடன் வந்து, அவருக்கு இராமனைச் சுட்டிக் காட்டினாள்.

''துமிலப் போர் வல் அரக்கர்க்குச் சுட்டினாள்
அமலத் தொல் பெயர் ஆயிரத்து ஆழியான்
நிமலப் பாத நினைவில் இருந்த அக்
கமலக் கண்ணனைக் கையில் காட்டினாள்''. (2889)

இராமாநுச மரபு ஒன்றுண்டு: மனத்தில் எக்காரணத்தாலோ தீய எண்ணம் தோன்றி, மனம் மாசு உற்றால், அதை நீக்கக் கழுவாயாக, திருப்பாணாழ்வார் அருளிய 'அமலனாதிபிரான்' பாசுரங்களைச் சேவித்தால் மாசு அகலும், என்பது. இராமன் விளையாட்டால் விளைந்த தீமையை உணர்ந்து, அமலனாதிபிரான் சேவித்துக் கொண்டிருந்ததைக் கம்பன் எதுகையில் அமைத்துக் காட்டுகிறார்.

இம் மரபுக்கு எந்த நூலிலும் ஆதாரம் கிடைத்திலது. அது 'செவி வழி மரபு' ஆகலாம். சிந்திக்க உரியது.

## சரணாகதி

சரணாகதி விசிட்டாத்வைதத்தின் உயிர் நாடி. ஆசார்யர்கள் அந்நெறியை ஆய்ந்து போற்றி உள்ளனர். அந்நெறியை மூல வாக்யம் கீதையில் கண்ணன் அருச்சுனனுக்கு உபதேசித்த இறுதி சுலோகம்: எல்லாத் தருமங்களையும் அறவே துறந்து என்னையே புகல் அடை; நான் உன்னை எல்லாப் பாவங்களிலிருந்தும் விடுவிப்பேன்; சோகம் உறாதே'' (18.66). கத்யத்தின் இறுதியில் இராமாநுசர் இந்த சுலோகத்தையும், இறைவன் சத்யத்தைக் காத்தலையும் இரண்டு படப் பேசாமையையும், நினைவு கூர்ந்து, ''எனக்காக அன்றோ நீ இவற்றைச் சொன்னது!'' என வியக்கிறார்.

இராமாயணம் சரணாகதி காவியம் என்பது பெரியோர் முடிபு. சரண் புகுவோன், சரண் தருவோன், இயல்புகள், கடமைகள் இந்நூலில் வரையறுக்கப் படுகின்றன. தண்டக முனிவர்க்கும், வீடணனுக்கும் சரண் தந்தது வால்மீகத்துக்கும் கம்பனுக்கும் பொது. 'நாகம் ஒன்றிய நல்வரையில், காகம் ஒன்றை முனிந்து, வேக வெம்படை விட்டது' (5421)டன் பிராட்டி நிறுத்திக் கொள்கிறாள்; வால்மீகத்தில் சரணாகத் ரக்ஷணமாக இது வளர்கிறது. சுக்கிரீவன் இராமனைச் சரண் அடைதல் வால்மீகத்துக்கு நேர் மாறுபாடு. வாலி சுக்கிரீவனையும் அங்கதனையும் இராமனுக்குக் கையடை ஆக்கியதும், கும்பகருணன் வீடணனை இராமனுக்கு மீண்டும் அடைக்கலப் படுத்தியதும், அதன் விளைவும் வருணன் சரண் அடைதலும் கம்பன் புதிதாக ஏற்படுத்தியவை. இறுதியாக தகாத கையடை ஒன்றையும் கூறுவேன்.

காகம்

''தந்தையாலும், தேவர்களாலும், இருடிகளாலும் கைவிடப்பட்ட சயந்தன் மூ உலகங்களிலும் திரிந்து திரும்ப அவனையே சரண் அடைந்தான்'' (38.33) ''கொலைக்குற்றம் புரிந்தவன் எனினும், பூமியில் வீழ்ந்து கிடந்த சரணாகதனை சரண்யன் கருணையுடன் காத்தான்'' (34).

காகம் பிராட்டிக்கு இழைத்த குற்றம் கொடியது. பெரியவாச்சான் பிள்ளை இதனின்று பெறும் நீதி:

'பெரிய குற்றத்தைச் செய்தவரும், வேறு புகல் அற்றவருமே அன்றோ காக்கப்பட வேண்டியவர்!''

இதைக் கம்பன் தொட்டு விட்டதன் காரணம் தெரியவில்லை.

சுக்கிரீவன்

வால்மீகத்தில் இலக்குவன் வாக்காக ''நானும் இராமனும் சுக்கிரீவனைச் சரண் அடைகிறோம்'' என நான்கு முறை (4,4, 17,19,20,23) சொல்கிறான். ''இராமன் உலகத் தலைவன், அறத்தின் மூர்த்தி; சக்ரவர்த்தித் திருமகன், சீதை மணாளன் எல்லா உயிர்கட்கும் புகலிடம்; என் தமையன் — சுக்கிரீவனைச் சரணம் அடைகிறான்; சுக்கிரீவனுடைய அருளை வேண்டுகிறான்'' எனப் பொருமலுடன், கண்ணீர் வழியக் கதறியன அவ் இரங்கல் பாக்கள்.

இராமனே ''இவ்வனத்தில் நீயே எம் புகல் இடம்; நானும் இலக்குவனும் அழகிய சீதையும் உனக்குக் கட்டுப்பட்டவர். மூவரும் உன்னைச் சரண் அடைகிறோம் 'பவாந்' (4, 12, 35, 36) ('பவாந்' என்ற விளி மிக உயர்ந்தவர் மாட்டு ப்ரயோகிக்க உரியது) பின்னர், இதற்கு இராமன் கழிவிரக்கம் படுகிறான். கார்காலம் முடிந்தும் சுக்கிரீவன் வராததால் மனம் நொந்த இராமன் ''இந்த பாவிப் பயல் (துராத்மந:) சுக்கிரீவனைச் சரண் அடைந்தேனே'' (30,67)

எனத் தன்னையே நொந்து கொள்கிறான். இளங்கோ சீற்றத்துடன் கிட்கிந்தை சென்று, சுக்ரீவனுடன் திரும்பிய போது, சுக்ரீவன் இராமன் பாதங்களில் வீழ்கிறான் ஆனால் சரணாகதனாக அன்று (4, 38, 18) இராம சரணாகதியை ஆசார்யர்கள் ஒப்புக் கொண்டனர் என வேதாந்த தேசிகனுடைய 'ரகுவீரகத்ய'த்திலும், ஈகு 1.4.6 உரையிலும் காணலாம்.

கம்பன் ஏற்கவில்லை. ''என்னை ஆளுடை நாயகன்'' (10.34) எனக் கவிக் கூற்றறாகப் பல இடங்களில் இராமனுக்குப் பரத்துவம் கூறியவன் எவ்வாறு இறைவன் குரங்கைச் சரணம் அடைந்தான் எனக் கூறமுடியும்?

சுக்கிரீவனே இராமனை வந்து கண்ட முதல் சந்திப்பிலேயே ''சரண் வனைப் புகுந்தேன்; என்னைத் தாங்குதல் தருமம்'' என்றான்.

சில கிட்கிந்தா காண்ட நிகழ்ச்சிகள்

''தேவியைப் பிரிந்த பின்னர் திகைத்
தினை போலும் செய்கை'' (4020)

என்ற வாலியின் ஏச்சை மெய்ப்படுத்துகின்றன.

(சரணம் - திருவடி; (ஸ)ரணம் (சரணம்) - புகல், அடைக்கலம் இரண்டும் தமிழில் ஒரே 'ச' கொண்டு எழுதப்படுகிறது, எழுத்தும் உச்சரிப்பும் வேறானவை. ''சரணம் (ஸ) சரணம் என்றானே'' என்ற அருணாசல கவிப்பாடலை அரியக்குடி ராமாநுஜ ஐயங்கார் பாடியது போலச் சரியான உச்சரிப்புடன் பாடுவோர் சிலரே.)

வாலி

வாலி சுக்கிரீவனை ''மற்று இவன் சுற்றத்தோடும் உன் அடைக்கலம் என்று உய்த்தே உயர் கரம் உச்சி வைத்தான்'' (4709) இராமன் அடைக்கலத்தை ஏற்றுக் கொண்டதாகக் கவி கூறவில்லை. இந் நிகழ்ச்சி வால்மீகத்தில் இலது.

கம்பன் வாக்கில் சுக்கிரீவன் முதலில் தானாக வந்து சரணடைந்தான். மறுபடியும் வாலியால் குருவால் சரண் அடைவிக்கப்பட்டான். சரண் அடைதல் ஆசார்யன் வாயிலாக நிகழ உரியது என்பது விசிட்டாத் வைதக் கொள்கை.

சரண் அடைதல் ஒரு முறையே செய்ய வேண்டும் என்பது ஒரு சார்பினர் வாதம். அச்சார்பினர் இவ் இரு சரணாகதிகளை நோக்குக.

அங்கதனைக் களத்துக்கு அழைத்து வந்து ''உன் கையடை ஆகும்'' என

இராமற்குக் காட்டினான். (4092) வால்மீகத்தில் ''அவன் காக்கப்படுக'' என்று மட்டும் உள்ளது.

கும்பகருணன்

அங்கங்களை ஒவ்வொன்றாக இழந்து, உயிர் இழக்கும் தறுவாயில், கும்பகருணன்.

''என் தம்பி...உனை அடைந்தான்;
வேதியா, இன்னம் உனக்கு அடைக்கலம்
யான் வேண்டினேன்'' (7625)

''உம்பியைத்தான், உன்னைத் தான்
அநுமனைத்தான் ஒரு பொழுதும் எம்பி
பிரியானாக அருளுதி; யான்
வேண்டினேன்'' (7627)

என, முன்பு சரண் அடைந்தவனுக்கு உயிர்க் காப்பு வேண்டுகிறான்.

இதன் விளைவு என்ன என்று பார்ப்போம்.

இந்திரசித்து இலக்குவன் மேல் விட்ட பிரமாஸ்த்திரம் ''தம்பியைத் தொலைத்து, சிறந்த நண்பரைக் கொன்று, சேனையைச் சிதைத்தது'' (8626) வேறு இடத்திருந்த இராமன் களத்துக்கு வந்து சுக்கிரீவனையும், அங்கதக் களிற்றையும் கண்டான். ''படைக்கலங்களைச் சுமக்கின்ற பதகனேன்; பழி பார்த்து அடைக்கலப் பொருள் காத்தவாறு அழகிது'' என்று அழுதான்'' (8636). அப்போது வீடணன் அங்கு இல்லை.

வீடணனுக்காகவும் இளங்கோவுக்காகவும் கம்பன் வகுத்தது வேலேற்ற படலம் இராவணன் வீடணன் மேல் எறிந்த வேலைத் தன் மார்பில் ஏற்று அனுமன் கொணர்ந்த மருந்தால் தெளிந்த இலக்குவன் அனைவரோடும் இராமன் பால் ஏகினன். முதலில், இராமன் அனுமனைப் புல்லி, ''பெரியோய், என்றும் அற்று இடையூறு செல்லா ஆயுளை ஆதி'' (9576) என வாழ்த்தினன். அதன் பின்னரே, தம்பியைத் தழுவி,

ஐய, இரவிதன் குலத்துக்கு எற்ற வளலினம், அடைந்தோர்க்காகி மன் உயிர் கொடுத்த வண்மை, துளவு இயல் தொங்கலாய், நீ அன்னது துணிந்தாய் என்றால், அளவு இயல் அன்று; செய்தற்கு அடுப்பதே ஆகும் அன்றே'' (7578)

(வளலினம்; வள்ளல்தனம், கொடை; அளவு இயல்-அளக்கத்தக்கது) நீ செய்ய வேண்டிய கடமையைச் செய்தாய், இதில் பாராட்ட என்ன உள்ளது?

உன்முன்னோன் சிபி இத்தகைய செயலைப் புரிந்தான் எனில் அது புறாவின் வேண்டுகோளுக்காக. நீயோ புறத்தூண்டுதல் ஏதும் இன்றி, முற்பட மனத்தால் தூக்கல் (ஆராய்தல்) இன்றி, உன் இயல்பு ஒன்றே காரணமாக, இச்செயல் புரிந்தாய் (Reflex action). ஆதலால், சிபி உன்னை நிகர்க்கிலன் இங்கு, ஓர் அரிய உவமை வருகிறது.

பேர் அருளாளர் என்பார்

கறவையும் கன்றும் ஒப்பார், தமர்க்கு
இடர்காண்கில்' என்றான் (9579)

கன்றுக்கு இடர்நேரின் கறவைப்பசு கன்று அழைப்பதன் முன்னர் தானாகவே சென்று அவ் இடரைக்களையும் இயல்பு புகல் புக்கவர் இடரைப் புகல் கொண்டவர் நீக்கலுக்கும் உரியது.

வால்மீகத்தில் இராவணன் வேலை
எறிந்தது இலக்குவன் மார்பில் (6100-31)
அப்போது இராமனும் அருகில் இருந்தான்.

வருணன்

சிந்திய மொழியன், தீந்த சென்னியன்,
திகைத்த நெஞ்சன்

வெந்து அழிந்து உருகும் மெய்யன்,
விழுப்புகைப் படலம் விம்ம,

அந்தரின் அலமந்து, அஞ்சி, துயர்
உழந்து, அலக்கண் உற்றான்'' (6655)

(அந்தர் - குருடர்)

''கவயம் நின் சரணம் அல்லால், பிறிது ஒன்று கண்டது உண்டோ? அவயம் நின் அவயம்' என்னா அடுத்து அடுத்துஅரற்று கின்றான்'' (6656)

இராமனைத் துதித்தது,

''ஆயிர நாமத்து ஐயா, சரணம் என்று அடியில் வீழ்ந்தான்'' (6661)

வால்மீகியும் ஆசார்யர்களும் இவ் அபயநிகழ்ச் சியைக் கூறவில்லை.

இரு நூல்களிலும், இராகவன் சமுத்ரத் தைச் சரணம் அடைய வேண்டும் எனத் தூண்டியவன் வீடணன் (6.19.30). ''படை செலவழி வேறு இரந்து வேண்டுதி எறிதிரைப் பரவையை என்றான்'' (6590) இராமன் மூன்றுநாட்கள் தவம் கிடந்தும் சமுத்ர அர சன் வாராமையால் வெகுண்டு சரம் தொடுக்க முற்பட்டபோது, வருணன் வருகை மிக கம்பீர மாகக் கூறப்படுகிறது. சுடர் மணிகள், பொன் ஆரங்கள், பூ மாலைகள், சுழலும் அலைகள், கங்கை-சிந்து ஆறுகளாகிய மனைவியர் புடை சூழ வருகிறான் (22-17-22). அவன் இராம னோடு பேசுவது போன்றது ''ஐம்பூதங் களின் இயற்கையை நீ வெல்ல முடியாது; கடல் நீரை வற்றச் செய்ய முடியாது. கடலைக் காமத்தாலும், லோபத்தாலும் பயத் தாலும் வெல்ல முடியாது. எனினும், நீ மேற்கொண்டதன் பயன் கருதி, ஆழமில்லாத பகுதியில் நளனைக் கொண்டு அணை கட்ட உதவுவேன்'' (25-30, 45) என்று கூறி மறைந்தான்.

சரண்யன்

யாரைச் சரணம் அடைவது? தகுதி உடையவருக்கே சரணம் உரியது. கண்ணன் 'மரம் ஏவ'- என்னையே சரணமாக அடை என்றான். பிறருக்குச் சரணமாக்குதல் வீண் என்பதையும் கம்பன் கூறுகிறான்.

வேத்தவையில், இராமன் தயரதன் ஏவ, இராமன் 'முடிபுனைந்து நல்அறம் புரக்க' இசைந்ததும், ஆண்டு இருந்தவருக்கு இராம னைக் கையடைப் படுத்துகிறான்; 'நெறி யின், ஈங்கு இவன் நும் மகன்; கையடை; நோக்கும் ஈங்கு' என்றான்'' (1397).

மறு நாள் காலை, அரசர் இனிது இருந்த நல்அவையில், முனிவன் 'வேந்தன் பணி யினால் கைகேசி மெய்ப்புதல்வன் . பார் அளிப்பான் ஆயினான்; இராமன் காடு உறைவான் ஆயினான்'' (1696) என, கையடை பெற்ற 'செம்மையின், தருமத்தின் செயலின், தீங்கின்பால் வெம்மையில், ஒழுக் கத்தில் மெய்ம்மை மேவின'' (1396) வேத் தவை என்ன ஆயிற்று? அரசர்களும் அந்த ணரும் ''தயரதனைப் போல் வீழ்ந்தார்'' உடம்பு எல்லாம் மண்உற்று அயர்ந்து மறு கிற்று; கண் உற்றவாரி கடல் உற்றது; விட்டு அழுத பேர்ஓசை விண் உற்றது; 'ஆ ஆ அரசன் அருள் இலனே' என்பார்; 'காவா அறத்தை இனிக் கைவிடுவோம்' என்பார்; கையால் நிலம் தடவி கண்ணீரால் மெழுகுவார்; ''என்னே நிருபன் இயற்கை இருந்தவா! தலைமகற்குத் தாரணியை முன்னே கொடுத்து, முறை திறம்பத் தம்பிக்குப் பின்னே கொடுத்தால் பிழை யாதோ? மெய் என்பார்.''

ஒருவரேனும் தசரதன் படுத்திய கையடை யைக் குறித்துக் கருதவில்லை.

இது பூரியர் மாட்டுக் கையடை!

இறைவனைப் போன்றே மன்னனும் தவறு செய்யான் (மன்னனிடம் இறைமை யின் கூறு உள்ளது). அவன் தவறு செய் வதாகத் தோன்றினாலும், அச்செயல் மக் களுக்கு நன்மையே பயக்கும், இது அக் கால நம்பிக்கை.

அவையோர் தம் அடைக்கலப் பொருளைக் காக்கும் கடமையினின்று வழு வினர் என்ற பழியை ஏற்றும், தசரதன்

தவறு இழைத்தான் என அறிந்தும், அவனை எதிர்க்கவில்லை. வால்மீகத்தில் இக்கையடை இலது.

## வேதங்களின் உயர்வு

''பிரமத்துக்குச் சான்று வேதங்கள்: ஏனைய ப்ரமாணங்களினும் சுருதி ப்ரமாணம் ஏற்றம் உடையது'' என்பது ஸ்ரீ பாஷ்யம்.

கம்பனுடைய காவியம் வேதங்களை முற்றிலும் ஏற்றுக்கொண்டு, அவற்றின் சான்றை மேலும் உயர்த்துகிறது.

''வேத நெறி முறையின் நேடி ஆய்ந்த
உணர்வின் உணர்வு'' (2615)

''நான்மறைத் துணிவினில் துணிந்த
மெய்த்துணிவு'' (10050)

''தெரி மறைகளின் தலைகள்'
'மன் பெரும் பரமார்த்தம்' என்று உரைக்
கின்ற மாற்றம் அன்ப, நின்னை அல்லால்
மற்று இங்கு யாரையும் அறையா'' (10052)

(மறைகளின் தலைகள் — உபநிடதம்)

அளவைகள் பொய்க்கும் போது, உபநிடதம் சான்றுதரும் ''அளவையால் அளந்து, 'ஆம்', 'அன்று' என்று அறிவுறும் அமைதி உளவை யாவையும் உனக்கு இல்லை; உபநிடதத்து உனது களவை ஆய்ந்து உறத் தெளிந்திலது ஆமினும், கண்ணால் துளவை ஆய் முடியாய், 'உளை நீ' எனத் துணியும்'' (10056)

அச்சான்றுக்கு வேறு சான்று இலை. (10055)

இறைவனை மறுத்து, 'நானே இறைவன்' என்று இறுமாப்பு கொண்ட இரணியனும் வேதங்களை ஒப்புக்கொள்கிறான். ''யாவரும் என் இருகழலே நினைவது; ஓதுவது என் பெயர்'' (6236), ''இப்பேர் (நாராயண) சொற்ற நாவையும் கருதிய மனத்தையும் சுடும் என் ஒற்றை ஆணை'' (6235) என்ற நிலையிலும், தான் பெற்றுள்ள நிலைக்கு 'வேதம் சான்று' என்கிறான்.

''வேதம் எங்ஙனம் அங்ஙனம் அவை
சொன்ன விதியால்
கோதுஇல் நல்வினை செய்தவர்
உய்குவர்'' (6241)

''யான் தவம் இயற்றி,

''பொய்இல் நாயகம் பூண்டபின் இனி
அது புரிதல்
நொய்யது ஆகும்''. (6242)

(அது — நாராயணனை மதிப்பது)

அவனுடைய 'தலைமை நல்வினையால் விளைந்தது; வேத விதிப்படி தக்கது' என்ற கருத்தைப் பிரகலாதன் 'அது சாங்கியம்'' என மறுக்கிறான். (6248).

சாங்கியம் வேதங்களில் கூறப்பட்ட வினையையும் வினைப்பயனையும் ஏற்கிறது; ஆனால், வினைகளை இயக்க ஓர் இறைவனை ஏற்பதில்லை. பிரகலாதனுடைய வாதம் வேதங்களுக்கு மேலையான் ஒருவன் உளன் என்பது.

''அன்னவன் ஓங்கிய மேல் நிலை
உணரற் பாலதோ?'' (6248)

''சித்து என அருமறைச் சிரத்தின் தேறிய
தத்துவம் அவன்'' (6249)

''அளவையான் அளப்ப அரிது; அறி
வின் அப்புறத்து உள்ளான்'' (6250)

இராமன் 'வேத நாயகன்' (5869); அவன் திருவடிகள் ''வேதங்கள் அறைகின்ற பாதங்கள்'' (2563)

அவன் ஏறும் மாருதி 'வேதம் ஒத்தனன்' (7236); அவனுடைய ஊர்தி கலுழனுடைய சிறை வேதங்கள் பாடும் (8246) வேதங்கள் உயர்ந்தன எனில், இறைவன் — இராமன்-வேதங்களினும் உயர்ந்தவன்.

இராவணன் வேதங்கள் பால் கொண்டிருந்த பெருமதிப்பு அவன் மாலியவானிடம் கூறும் ''வேதம் தப்பின போதும் அன்னான் தனு உமிழ் சரங்கள் தப்பா'' (7297) பேச்சால் காணலாம்.

இராமன் இலக்குவனைக் கடிவதும் ''வாய் தந்தன கூறுதியோ மறை தந்த நாவால்'' (1736) என வானரர் பேச்சில் வேதம் புழங்குவதில்லை.

### பக்தி

கம்பனுடைய சிறந்த அறிவாற்றல் பக்தி ரூபமாகக் காவியத்தில் பெருக்கெடுக்கிறது.

இவ்வுலகில் சிறந்த மனிதனுடைய சரிதத்தைச் சொன்ன வால்மீகியின் காவியம் கம்பன் வாக்கில் கடவுளின் அவதாரக் கதை ஆயிற்று, அதற்கு ஏற்ப, கவிக் கூற்றாகவும், பாத்திரங்களின் கூற்றாகவும், இராமனுடைய இறைமை போற்றப்படுகிறது, மூலத்தில் இல்லாத விராதன், இந்திரன், கவந்தன், கருடன் ஆகியோருடைய பெருந்துதிகளும், பல சிறு துதிகளும் இடம் பெறுகின்றன.

இராமானுசருடைய வாக்கு கம்பனைப் பிரதிபலிக்கிறது.

✵

---

# இராம தரிசனம்

பேராசிரியை ஆ. ரா. இந்திரா

உலகத்தின் ஒரு பகுதியில், ஒரு நாள், ஒரு சின்னஞ்சிறு உரையாடல் நிகழ்ந்தது;

ஒரு மலருக்கும், ஒரு கனிக்கும் இடையே அந்த உரையாடல் நிகழ்ந்தது;

அந்த ரகசியப் பேச்சு, மெல்ல, மெல்ல காற்றில் மிதந்து குருதேவர் தாகுரின் கவிஞ்தைச் செவிகளை நோக்கித் தவழ்ந்தது.

தன் உயிர்த்துடிப்பால், கேட்பவர் மனத்தைச் சிலிர்க்கச் செய்யும் அந்த உரையாடலைத் தாகுர், இரண்டே வரிகளில் நமக்குத் தருகிறார்;

நீ என்னிடமிருந்து எவ்வளவு தொலைவில் இருக்கின்றாய், கனியே!''

''தொலைவா? மலரே, உன் இதயத்தில் அல்லவா நான் பொதிந்து கிடக்கின்றேன்!''

எவ்வளவு அற்புதமான உரையாடல்! பொருளாழம் நிறைந்த உரையாடல்!

மலருக்கும், கிளிக்கும் இடையே உள்ள இந்த உறவு - தாகுர் சுட்டிக் காட்டும் உறவு இன்னும் எத்தனையோ பொருள்களுக்கு இடையிலே, இரண்டு - இரண்டாக நாம் இணைத்துப் பார்க்கக்கூடிய பொருள்களுக்கு இடையிலே, இணைத்துப் பார்க்கக்கூடிய தத்துவங்களுக்கு இடையிலே, மின்னி நளிர்வதை நாம் காண இயலும்; தன்-அனுபவ ஒளியில் மூழ்கி எழும், சிந்தனை வீச்சில் காண இயலும். ''நவில் தொறும் நூல்நயம்'' என்று வள்ளுவப் பெருமான் பாராட்டுகின்றாரே, அத்தகைய நூல்களில் உள்ள சொல்லுக்கும், அச் சொல்லின் பொருளுக்கும் இடையே உள்ள உறவில் இருந்து, ''எல்லை நன்று இன்னம்'' என்றும் பொருளினை எட்டிப் பிடிக்க முயலும் மனித உயிருக்கும், மனித உணர்வின் எல்லைக் குள்ளும், நிறைந்து, விளையாடி, ''எல்லை ஒன்று இன்மை'' என்றும் பொருளாகவும் நிற்கும் இறைவனுக்கும் இடையே உள்ள உறவு வரை நிலவும் பல உயர்ந்த உறவு நிலைகள், தாகுர் சொல்லாமல் சொல்லும், பூவினையும், பழத்தினையும் நினைவூட்டும் உறவுக் கோட்டில் பொருந்தக் கூடியவை; உணரும் போது, பரவசம் ஊட்டக் கூடியவை; நம் சிந்தனையின் போக்கினை விரிவுபடுத்தக் கூடியவை.

இந்த உண்மையின் மாண்பினை, அனுபவபூர்வமாக உணர்ந்து, வியந்து, மகிழ்ந்து, கரைந்து நிற்கும் வாய்ப்பு, இலக்கியம் பயிலும் போது நமக்குக் கிடைக்கும் மிகப்பெரிய பேறு ஆகும்; அதிலும் கம்பனைப் போன்ற ஓர் ஒப்பற்ற மகாகவியின் காப்பியத்தைப் படிக்கும்போது, இந்த மகிழ்ச்சி அனுபவம் மீண்டும், மீண்டும் தளிர்த்தெழுந்து, நம்மை ஆட்கொள்ளும். கம்பனுடைய இராமாவதாரத்தில், ஊறித் திளைத்துள்ள அறிஞர் பெருமக்களுக்கு, இக்கருத்து புதிது இல்லை; பன்னீராயிரம் கவிதைகளைப் பாடி, கற்றோர் இதயத்தைக் களிக்க வைத்துள்ள கம்பன், தன் காப்பியத்தில், ஏதாவது ஒரு குறிப்பிட்ட பாடலில் இடம்பெறும் ஒரே ஒரு சொல்லால், தாகூர் உணர்த்தும் மாபெரும் உறவுநிலையைக் கண்முன் நிறுத்தி, தெளிவின் இனிமையை நாம் நுகரும்படி செய்வான் என்பதும் இலக்கிய ரசிகர்கள் உணர்ந்த ஒன்று. அந்த வகையில், கம்ப ராமாயணத்தில், ''ஒரு குறிப்பிட்ட பாடலில் வரும் ஒரு சொல் — ஒப்பற்ற சொல் — எப்படி ஒரு புது உண்மையை, அமுதக் கலசம் போல் தாங்கி நிற்கின்றது; அந்தச் சொல்லும், அதன் பொருளும், மலராய், கனியாய் எவ்வளவு இயல்பாக இணைந்துள்ளன''

என்றும் மகிழ்ச்சியின் அடித்தளமான வியப்பு உணர்ச்சிதான், ''இராமதரிசனம்'' என்னும் தலைப்பாக மலர்ந்தது.

கவிச் சக்ரவர்த்தியாய், கல்வியில் பெரியவனாய், தனக்கு முன் தோன்றிய தமிழ்ப் புலவர் அனைவரின் இலக்கியத் தேட்டத்தையும் தன்னுடையது ஆக்கிக்கொண்டவனாய், வான்மீகியை முற்றும் உணர்ந்த தனி மகனாய், தத்துவஞானியாய். இப்படிப் பல வகைகளில் சிறப்புடைய கம்பனைப் பாரதியார், ''எல்லை நன்று இன்மை'' என்னும் பொருளினைக் குறிகளால் காட்டிட முயலும் கம்பனாகக் குறிப்பிடுகின்றார். அது உண்மை தானே? பரம்பொருள், ''எல்லை நன்று இன்மையாக'' (Infinite) இருப்பது போல் தான், பரம்பொருளை நோக்கித் திரும்பி, இடைவிடாமல், தன் ஆன்மப் பயணத்தை நடத்தும் மனித உயிரின் முயற்சியும் ''எல்லை நன்று இன்மை'' என்னும் தன்மை உடையதாக இருக்கின்றது. இதை குறிப்பிடுகின்ற வேதம், ''..ஒய்வு இல்லாமல், ஒழிவு இல்லாமல், ஜீவ ஆன்மா என்னும் இந்தப் பறவை உண்மையை நோக்கி, எல்லை நன்று இல்லாத பயணத்தை (Infinite Journey) மேற்கொண்டு உள்ளதே! ஆயிரம், ஆயிரம் ஆண்டுகளாக தன் சிறகை விரித்த வண்ணம், மேலே, மேலே பறந்து, தன் எல்லையற்ற பயணத்தை தொடர்கின்றதே! ...'' என்று விளக்குகின்றது.[2] இந்த 'எல்லையில்லாத' பயணத்தின் சுவடுகள், கம்பன் இராமாவதாரத்தில் அங்கங்கே பளிச்சிடுகின்றன.

எல்லை இல்லாத ஒன்றினை நோக்கித், தம் எல்லை இல்லாத பயணத்தை மேற்கொண்டு, தம் அனுபவ உணர்வுகளை எல்லாம் தமிழ்ப்பாடல்களாக வடிவு பெறச் செய்து, தமிழை, தெய்வத்தமிழ் ஆக்கிய அருட் கவிஞர்கள் - நாயன்மார்கள், ஆழ்வார்கள் - பலர், கம்பனுக்கு முன்னால் தோன்றி இந்த மண்ணை, ''நல்ல வண்ணம் வாழக் கூடிய மண்ணாக'' ஆக்கித் தந்துள்ளனர். அந்த அருளாளர்களுடைய பாடல்களில் எல்லாம், இறை இயல்பு, (அவன் அருள் மனித உயிரின் ஏக்கம், இறைவனுக்கும், மனிதனுக்கும் இடையே உள்ள ஒழியாத உறவு, இவைகளுடன் கூட, எட்டிப் பிடிக்க வேண்டிய மெய் சத்தியச் சுடரை அவர்கள் மின்னல் வேகத்தில், ஒரு வினாடி, தொட்டு நின்ற அனுபவப் பொருண்மையும், அதன் விளைவாக இறைவனோடு அவர்கள் கொண்டாடும் உரிமையும், தம்மை இனம் காட்டிக் கொள்ளும். ''குனித்த புருவமும், கொவ்வைச் செவ்வாயில் குமிண் சிரிப்பும்'' என்று தொடங்கும் பாடலை, ''மனித்தப் பிறவியும் வேண்டுவதே இந்த மாநிலத்தே'' என்று அப்பர் பெருமான் நிறைவு செய்கின்ற போது, ''இனித்தமுடைய எடுத்த பொற் பாதத்தைக் கண்டுவிட்ட'' நிறைவு, மாலை மதியத்தைப் போலவும், வீசும் தென்றலைப் போலவும் மென்மையாக வெளிப்படவில்லையா? ''சிக்கெனப் பிடித்தேன், எங்கெழுந்து அருள்வது இனியே'' என்று மாணிக்க வாசகப் பெருமான் உரிமையுடன் குரல் கொடுக்கும் போது, எல்லை ஒன்று இல்லாத பெரும்பொருளுடன், உறவாடும் அவர் தனித்தன்மை பளிங்கு போல் விளங்கவில்லையா?''

''பண்ணார் பாடல் இன்கவிகள்
யானாய்த் தன்னைத் தான்பாடி'',

என்று நம்மாழ்வார், உணர்ந்து, உருகும் போது, பரமனோடு அவர் இணைந்து நின்றநிலை நம் மனத்தையும் உருக்குகின்றதே! இதே நிலையை வங்க கவி தாகுர் ஒரு பாடலில் விளக்குகிறார். ''இறைவா, உன்னை நீயே இர்ண்டு பிரிவாக்கி, நடுவில் ஒரு சிவரம் வைக்கின்றாய்... பின்னர், நீயே நானாக, என்னை இசை பாடி அழைக்கின்றாயே!

''உன்னை நீயே இரண்டாக்கி
ஊடே சுவரும் வைக்கின்றாய்
உன்னில் பிரித்து நீ நிறுத்தும்
உனையே தேடி அலைகின்றாய்

உன்னில் பிரிந்து நீயே தான்
உருவம் கொண்டாய் நானாக;

என்னைப் பின்னர் இசை கோடி
எடுத்துப் பாடி அழைக்கின்றாய்''

எல்லை இல்லாத மெய்ப்பொருளை நோக்கித் திரும்பும் உயிரின் அனுபவம், எப்படி தனித்தன்மை வாய்ந்ததாகத் தன்னை வெளிப்படுத்திக் கொள்ளும் என்னும் உண்மை இந்தப்பாடலில் புலனாகவில்லையா?

இத்தகைய 'தனி அனுபவ நிலைகள்' பலவற்றைக் கம்பன் காப்பியத்தில், நாம் காணலாம். சமயப் பொதுமை, சமயப் பெருமை, சமயக் கடவுளர், தத்துவ ஞானம், பக்தியின் ஆழம், வேத, வேதாந்தம் ஆகிய இவை நல்லொன்றும், கம்பனில் பெறும் இடம் பற்றி, தனித்தனியே ஆய்வு நடத்தி, நூல் எழுத இயலும். அத்தகைய கருத்துக் கருவூலம் கம்பன். இவற்றினுக்கு அப்பாற் பட்டதாய், மெய்ப் பொருளை' நாடிச் சென்று உறவாடிய, உரிமை கொண்டாடிய தனி அனுபவமும் அங்கங்கே, இடம் பெற்று, அவனுடைய காப்பியப் பெருமையை உயர்த்துன்றன.

பக்தர்களாய் வாழ்ந்து, நம்மை வாழ்வித்த அருட்கவிஞர்கள், நேரடியாக இறைவனை நோக்கி, பக்திப் பாடல்களைப் பாடி, துதித்து, தம் தனி அனுபவங்களை களையும், தம் கவிதைகளில் எதிரொலிக்கும் படி செய்ய இயலும். ஆனால், காப்பியக் கவிஞன், இதனைச் செய்வது இயலுமா? என்னும் கேள்வி எழலாம். காப்பிய அமைப்பின் அமைதி குலையாமல், நிகழ்ச்சிகளின் போக்கிலும் பாத்திரப் படைப்பிலும் தான் கையாளும் சில உத்திகளின் மூலம், ''இயலுமா?'' என்ற கேள்விக்கு இடம் இல்லாமல் செய்துவிடுகின்றான் கம்பன்.

காப்பியங்களில் ஆனாலும், நாடகங்களில் ஆனாலும், நூலாசிரியன், ஒரு பாத்திரத்தைப் படைக்கும் போது, அந்தப் பாத்திரமாகவே, தான் மாறி; அதன் அனுபவத்தைத் தன் அனுபவமாக ஏற்று, உள்ளத்தைப் பிரதிபலிக்கும் சொற்களைப் பயன்படுத்தும் போது, பாத்திரங்கள், முழுமையான உயிர்த்துடிப்புடன் இயங்கும். முரண்பட்டு நிற்கின்ற இரண்டு பாத்திரங்கள், ஒன்றோடு ஒன்று மோதும் போது, ஒவ்வொன்றின் தனித்தன்மையையும், அதுவாகவே நின்று, அனுபவித்து, உரையாடலை நடத்திக் கொண்டு போவது கவிஞனின் சிறப்பு. ஒரே ஒரு உதாரணம். நிகும்பலை யாகத்திற்குப் பிறகு, இராவணனைச் சந்திக்கிறான் இந்திரஜித்து, அப்போது, அவ்விருவருக்கும் நடந்த உரையாடல், பலரும் அறிந்த ஒன்று. வேறு பட்ட இரு கருத்துக்களுடன், தந்தையும் மகனும் பேசும் போது, அந்த இரு வேறு கருத்துக்களையும் துல்லியமாக வடித்துத் தருகின்றான் கம்பன். பாடல் முழுவதையும், பாராவிட்டாலும், இரண்டு வரிகள் போதும், கம்பன் திறனை விளக்க.

''............ஆசை தான் அச்சீதை பால்
விடுதி ஆயின், அனையவர் சீற்றம்
தீரிலர்''
............

(யுத்த - இந்திரஜித்து - 6ம் பாடல்)

என்று இந்திரஜித்தாகக் குரல் கொடுக்கும் கம்பன், உடனடியாக,

''.........
சீதையை விடுவது உண்டோ இருபது
திண்தோள் உண்டால்?''

(யுத்த இந்திரஜித்து - 9ம் பாடல்)

என்று இராவணனாக முழங்குகின்றான். இராமாவதாரத்தில் இத்தகைய இடங்கள் பல.

பாத்திரங்களாகத் தான் மாறிநிற்கும் நிலை மட்டும் இன்றி பாத்திரங்களைத் தானாக மாற்றி, தன் உணர்வை அவை பேசும்படி வைக்கும் இடங்களும் காப்பியங்களிலும், நாடகங்களிலும் உண்டு. கம்பனுடைய டைய காப்பியத்தில், அவனுடைய கருத்துக்களும், குறிக்கோள்களும், உணர்வுகளும்,

அனுபவங்களும் பல பாத்திரங்களின் மூலமாக வெளிவருகின்றன. அக்குறிக்கோள்கள் ஒன்று மெய்ப்பொருளைத் தேடி, உறவு பூண்டு, உரிமை கொண்டு நிற்கும் அனுபவ நிலை.

வான்மீகி இராமாயணத்திற்கும், கம்பன் இராமாவதாரத்திற்கும் இடையே உள்ள வேற்றுமைகளைப் பற்றி அறிஞர் பலரும் எடுத்துக் கூறுவர். இதற்கு அடிப்படையான காரணம், வான்மீகிக்கும், கம்பனுக்கும் இடையே இருந்த காலப் பெருவெளி. இந்தக் காலப் பெருவெளியில், இராமகாதை பாரத தேசம் முழுவதும் பரவி மக்களை ஈர்த்தது; கம்பனையும் கவர்ந்தது. ஆனால் அது மட்டு மன்று. தான் பிறந்து, வாழ்ந்த தமிழ் மண்ணின் பண்பாட்டைத் தன் மூச்சாகக் கொண்டவன் கம்பன்; தனக்கு முன்னால் தமிழில் தோன்றிய இலக்கியங்கள் அனைத்தையும், கற்று, தேர்ந்து, அவை அனைத்தையும் தன்னுடையதாக ஆக்கிக் கொண்டவன். கவிதா தேவியை ஒல்வொரு வினாடியும், மனம் உருகி, கரைந்து நின்று, வணங்கியவன். ஆகவே தான், தமிழ் இலக்கியம் என்னும் தொடர்சங்கிலியை, ஒரு மாபெரும் கீர்த்தனையைப் போல் உருவகித்துப் பார்த்தோமானால், தமிழ்ப் பண்பாடு சுருதி போல் அமைய, சங்க இலக்கியம் என்னும் பல்லவி தொடங்குகிறது; அடுத்து திருக்குறள் என்னும் அனுபல்லவி; பின்னர் சிலம்பும், நாயன்மார், ஆழ்வார் பாடல்களும் ஆகிய சரணங்கள்; இவை அனைத்திற்கும் சிகரம் வைத்தாற் போல், கம்பனின் இராமாவதாரம் என்னும் 'நிரவல்'. இப்படி நினைப்பதற்குரிய பெருமை நிறைந்தது அவன் காப்பிய சக்தி. தனக்கு முன்னால் தோன்றிய இலக்கியங்களினால் வளம் பெற்றிருந்தாலும், அவன் சிந்தனை, தன் சுய ஆற்றலை இழந்து விடவில்லை. தன் இலட்சியத்திற்கு, உரமூட்டும் உதவிக்கரமாகவே, அனைத்தையும் ஏற்றது. ஆகவே தான், தன்னை ஈர்த்த இராமகாதையைப் பாடும்போது, வான்மீகத்தை அப்படியே மொழிபெயர்க்காமல், சில மாற்றங்களை அவன் புலமை செய்தது. காப்பியத் தலைவன் இராமன் முதல் பல பாத்திரங்களை வடித்தெடுப்பதில், லட்சிய மெருகினை ஏற்றியது; வான்மீகத்தில் இல்லாத சில புதுமைகளையும் புகுத்தியது அவன் சிந்தனை. 'இரணியன் வதைப் படலம்' வான்மீகத்தில் இல்லாத ஒன்று; விராதன், கவந்தன், இந்திரன், கருடன் முதலானவர்கள் இராமனைத் துதி செய்வதாக அமைந்துள்ள காட்சிகளும் வான்மீகத்தில் இல்லாதவை. தத்துவ இமயமாக நின்று, சூட்சுமக் கருத்துக்களைச் சொல்வதற்கும், இராமனைக் காணும் போது, அக் காட்சியில் கரைந்து நின்று, பக்திக் கடலாய்ப் பொங்கி எழுவதற்கும், இந்தக் காட்சிகள் நல்ல வாய்ப்பாக அமைந்துள்ளன. இந்தக் காட்சிகளில் வரும் பாத்திரங்களில் சிலருக்குத் தான் கதையோடு தொடர்பு; சிலருக்கு இல்லை. கதைத் தொடர்பு இல்லாத பாத்திரங்களையும், ஒதுக்காமல், வான்மீகத்தில் இல்லாத முறையில் அவை துதிசெய்யும்படி கம்பன் அமைத்துள்ளான் என்றால், அவன் தன் உணர்வுகளுக்குக் குரல் கொடுக்கும் பாத்திரங்களாக அவைகளை பயன்படுத்துகின்றான் எனக் கொள்வதில் தவறு இல்லையே!

கவந்தன், விராதன் முதலான பாத்திரங்கள் இடம் பெறும் நிகழ்ச்சிகள் சாரமற்ற, ''வேதாளக் கதைகள்'' போன்ற கற்பனை என்று ஒதுக்குபவர்களும் உண்டு. ஆனால், மில்டனைப் பற்றி ஆராய்ச்சி நூல் எழுதியுள்ள மார்க் பாடிசன் என்னும் ஆசிரியர் கூறுவது இங்கே நினைப்பதற்கு உரியது. ''எல்லா கவிதைகளுமே, கனவுலக கற்பனையைத் தான் ஆதாரமாகக் கொண்டுள்ளன; ஆனால், நாம், அந்தக் கற்பனையை உண்மை என்று ஏற்றுக் கொள்ள வேண்டும்; நம் யதார்த்த உலகத்தில் இருந்து, குறிப்பிட்ட காட்சி அமைக்கப்படும் கற்பனை உலகத்திற்கு நாம் சென்று விடவேண்டும். நம்மை அங்கு அனுப்புவது கவிஞனின் வேலை; ஆனால், நாமும் பூரணமாக ஒத்துழைக்க வேண்டும்''.[4] இந்த உணர்வோடு,

ஆரண்ய காண்டத்தில் நுழைந்தோமானால், கம்பனைப் பொறுத்த வரையில், எவ்வளவு சிறந்த முறையில், விராதன் முதலான பாத்திரங்களைப் படைத்திருக்கிறான் என்பது தெரியும்.

ஆரண்ய காண்டத்தில் இராமனைத் தரிசிப்பவர்களில், சரபங்க முனிவரும், சபரியும், இராமன் வருகையை எதிர்பார்த்து தரிசிப்பவர்கள்; விராதனும், கவந்தனும், இராமனால், தங்களுக்கு 'சாப விமோசனம்' கிட்டும் என்னும் தளராத நம்பிக்கையோடு இருந்தாலும், அந்த உணர்வு தூசு படிந்து தேய்ந்த, நிலையில் இருந்தவர்கள். அவர்களுடைய வாழ்க்கை, சாபம் முதலான செய்திகள் இங்கு தேவை இல்லை. சாப விமோசனம் கிடைத்து, பழைய கந்தர்வ நிலையை அடைந்தவுடன், அவர்கள் செய்யும் துதி, கம்பனை இனம் காட்டும் சிறப்பு வாய்ந்தது. அதே வகையில் தான், சரபங்க ஆசிரமத்தில், இந்திரன் இராமனைக் கண்டு துதிக்கும் நிலையும், கருடன், நாகபாசபடலத்தில் இராமனைத் துதிக்கும் நிலையும் அமைந்துள்ளன.

வான்மீகத்தில் விராதன் மோக்ஷம் உண்டு; துதி இல்லை.[5] இந்திரன் துதி இல்லை,[6] கவந்தன் துதி இல்லை.[7] கருடன் துதி இல்லை.[8]

ஆழ்வார் பாடல்களில் கம்பன் ஊறித் திளைத்த நிலையே இத்துதிகளுக்கு அடிப்படை என்று கூறுவர். இதை ஒரு காரணமாக ஏற்றுக் கொள்ளலாம்.

'' ... ... ... ... ... ... ... — விதையாக
நல் தமிழை வித்தி என் உள்ளத்தை
நீ விளைத்தாய்,''
... ... ... ...

என்று திருமழிசைப் பிரானே அருளிச் செய்திருக்கும் போது, தமிழின் விளைவாக, பக்திக் கதிர் செழித்தது என்பது பெருமைக்குரிய ஒன்று. ஆனால், பாவத்தை விளக்கும் போது, இலக்கியப் பின்னணியின் செல்வாக்கு எவ்வளவுக்கு ஓங்கி நிற்கின்றதோ, அந்த அளவுக்குச் சுயமாகப் பூத்தெழும், அனுபவச் சுடராகவும் — கம்பனின் அனுபவச் சுடராகவும் இப்பாடல்கள் விளங்குகின்றன. மனித உயிர், இறைவனைக் கண்டு, உறவு பூண்டு உரிமை கொண்டாடும் தனி அனுபவம் அங்கங்கே தென்படுகின்றது. துதி பாடல்கள் அனைத்தையும் காண முடியாவிட்டாலும், இரண்டொன்றைப் பார்க்கலாம்.

கம்பன் காப்பியத்தில், விராதன் துதியாக அமைந்துள்ள பதினான்கு பாடல்களும், மிக, மிக ஆழமான தத்துவக் கருத்துக்கள் நிரம்பியவை, (கம்பன்— ஆரணிய காண்டம்— விராதன் வதைப் படலம்). தத்துவக் கருத்துக்களுக்கு அப்பாற் பட்டு, இராமனோடு உரிமையுடன் பேசுகிறான் விராதன், ''அறத்தைக் காப்பாற்றுவது, யார் துணையும் இல்லாமல், நீ தான் தனியாகக் கறங்கு போல் திரிய வேண்டுமா,

'' ... ... ...
அறம் காத்தற்கு உனக்கு ஒருவர்
ஆரும் ஒரு துணை இன்றி
கறங்கு ஆகும் எனத்திரிய
நீயே+யோ கடவாய் தான்''

(கம்ப - ஆரணிய - விராதன் வதை)

என்று உருகுகின்றான்.

இந்த ஏழை உயிர்கள், உன்னை உணர்ந்து கொள்ள வேண்டும் என்று துடிக்கின்றன. ஏன் அவைகளுடன் கண்ணாம் பூச்சி ஆட்டம் காட்டுகின்றாய். சத்தியப் பொருளை, மெய்யை, அவை சிறிது உணர்ந்து கொள்ளக் கூடாதா? உணர்ந்து உய்வு அடையக் கூடாதா? உனக்கு என்ன குறை அதனால்? ... நீ படைத்த உயிர்கள் தானே? ... ''

''மெய்யைத் தான் சிறிது உணர்ந்து
நீ விதித்த மன்னுயிர்கள்

உய்யத் தான் ஆகாதோ,
உனக்கு என்ன குறையுண்டோ''
... ... ... ... ...

(கம்பன், ஆரணிய — விராதன் வதை) என்று, மண் உயிர்களின் சார்பில், இறைவனைக் கெஞ்சுகிறான் விராதன்.

அது மட்டுமா, இன்னொரு கேள்வி கேட்கிறான்.

''உலகத்தில் தாயை அறியாத கன்றில்லை; கன்றையும் தாய் அறியும். இந்த உலகத்தின் தாய் நீ ஆனால், உனக்கு எல்லாப் பொருளையும் தெரியும்; அவை கன்றானால், தாயான உன்னைத் தெரிய வேண்டும் அல்லவா? ஆனால், உன் நிலை மண் உயிர்களுக்கு தெரியவில்லையே! இது என்ன மாயம்!

''தாய் தன்னை அறியாத கன்று இல்லை; தன் கன்றை
ஆயும் அறியும்; உலகின் தாய் ஆகின் நீ ஐயர்
நீ அறிதி எப்பொருளும்; அவை உந்தன் நிலை அறியா
மாயம் இது என்கொலோ, வாராதே வர வல்லாய்''

என்று விராதன் பேசும் போது, அவன் கேள்விக்கு விடை, ''வாராதே வரவல்லாய்'' என்னும் தொடரில் அமைந்திருந்தாலும், அத்தொடர் ''வந்தாய் போல வாராதாய், வாராதாய் போல் வருவானே'' என்றும் திருவாய் மொழித் தொடரை நினைவுக்குக் கொணர்ந்தாலும், ''தாய்க்குக் கன்றைத் தெரியும்படி ஆனால் கன்றுக்குத் தாயைத் தெரிய வேண்டாமா?'' என்று மழலைக் குரலில் கெஞ்சும், குழந்தையின் உரிமை, கம்பன் குரலாக ஒலிக்கின்றது.

அடுத்து, சரபங்கர் ஆசிரமத்தில் இராமனைக் காண்கின்றான்; துணுக்குறுகின்றான். ''தசரதன் மதலையாய் வருதும் தாரணி'' என்று திருமால் அபயம் கொடுத்தது உண்மைதான்; ஆனால், இந்தக் கோலத்தில் — தவக் கோலத்தில் — காட்டில் நடந்து வந்து, காப்பாற்ற வேண்டுமா? என்று துடிக்கின்றான். தத்துவக் கருத்துக்கள் நிறைந்த பல தொடர்கள், இந்திரன் துதியாக அமைந்த ஐந்து பாடல்களில் நிறைந்திருந்தாலும், மனம் உருகி, பதறி, ''என்றோ ஒரு நாள் எங்களுக்குத் தந்த வரம், பயன் அளிக்க, நீ வந்தாயே! உன் பாததாமரை, மண்ணில் பதித்து, நடக்க வேண்டுமா'', என்று கேட்கும் போது, இறைவனை உணர்ந்து உருகும் உள்ளம்-கம்பன் உள்ளம்-பேசுகின்றது.

''... ... ...
சிலை ஏந்தி வந்து, எம்மைச் சேவடிகள் நோவ
காலாது ஒழியின் பழி பெரிதோ?''
... ... ... ...

(கம்பன்-ஆரணிய-சரபங்க-29)

''... ... ... வெம்பகையால்
அலைப்புண்டு அடியோம் அடி போற்ற அந்நாள்
ஈந்த வரம் உதவ எய்தினையே - எந்தாய்
இரு நிலத்தலோ, இணையடித் தாமரை தான்''

(கம்பன்-ஆரணிய-சரபங்க-25)

அதோடு நிற்கவில்லை, ''நல்லவர்களைக் காத்து, மற்றவர்களை நீ காய்தி, ஆனால், தீவினையும் நீ தந்ததுதானே. அது நிலையில்லாதது தான், ஆனால், நீ தந்தது தானே? இந்த உயிருக்குத் தீமையைக் கூட தானாகச் செய்யத் தெரியுமா'' என்று கேட்டு, ''பாவம் நீ, தருமம் நீ'' என்னும் தத்துவ நிலையினை, கபடமற்ற குரலில் ஊடுருவிப் பார்க்கின்றான்.

''... ... ... ... ...
நவை தீர்க்கும் நாயகமே? நல் வினையே நோக்கி,

நின்றாரைக் காத்தி, அயல் பேரைக் காய்தி
நிலை இல்லாத் தீவினையும் நீ தந்தது அன்றே''

(கம்பன்-ஆரணிய-சரபங்க-30)

இறைவனோடு உறவு கொண்டாடும் உயிர் தானே இப்படி கேட்க முடியும்?

கருடனோ, இன்னும் அதிக உரிமை யுடன், ''கொல் என்று நீயே சொல்கின்றாய், பிறகு கொல்லப்பட்டவனாகவும் நீயே நிற்கின்றாய், இது என்ன கொடுமை? உன்னை எப்படிப் புரிந்து கொள்வது?''

'' ... ...

கொல் என்று உரைத்தி;
கொலை உண்டு நிற்றி;

கொடியாய் உன் மாயை அறியேம்''

என்று விம்மும்போது, 'கொடியாய்' என்னும் சொல்லில் தான், எவ்வளவு ஆற்றல் நிறைந்த ஆதங்கம்!

இப்படிப் பல இடங்களில், உறவு கொண்டாடும் உரிமையுடன் - தன் - அனுபவத்தின் வடிவாய் - இந்தத் துதிகளின் சில பகுதிகள் ஊற்றுப்போல் பொங்கி எழுகின்றன. எல்லை ஒன்று இன்மை என்னும் பொருளை நோக்கி, எல்லை இல்லாத பயணத்தை மேற்கொண்டு, தான் நாடிச் சென்று தேடிய பொருளைக் கண்டவனோ கம்பன் என்னும் உணர்வு மேலெழுகின்றது. தன் ஆன்ம அனுபவத்திற்கு குரல் கொடுக்கும் வகையில், வான் மீகத்தில் இல்லாத வகையில், விராதன் முதலான பாத்திரங்களை, இராமனை தரிசித்தவுடன் துதிக்கும்படி செய்து, அப்பாத்திரங்கள், தன்னுடைய பிரதிநிதியாய் இயங்கும் படி செய்கின்றான் என்னும் கருத்து அழுத்தம் பெறுகின்றது. கம்பன் ''எல்லை ஒன்று இன்மை'' என்னும் பொருளினைக் கண்டவன்; இராமன் வடிவில் கண்டவன்; கண்டு பேசியவன்; கண்டு மலைத்தவன்; கண்டு வாதம் செய்தவன்; கண்டு உருகியவன்'' என்னும் எண்ண அலைகள், சிந்தனை அரங்கில் விம்மி எழுகின்றன.

இதற்கு ஆதாரமாக, கம்பன் இராமாவதாரத்தில், கவிக்கூற்றாக வரும் சில பாடல்கள் அகச்சான்றுபோல் அமைகின்றன. அதிலும், ஒரு பாடல் நெஞ்சை அள்ளும், கொள்ளை அழகுடையது. பலருக்கும் தெரிந்த பாடல்: பலமுறை அறிஞர்கள் எடுத்துச் சொல்லி, சுவை உணர்த்திய பாடல். அயோத்தியா காண்டம், கங்கைப்படலத்தில் அமைந்துள்ள, ''வெய்யோறொளி தன் மேனியின்'' என்று தொடங்கும் பாடல். இந்தப் பாடலின் சொல் அழகும், சொல் தாங்கி நிற்கும் பொருளின் ஆழமும் விண்டுரைக்க முடியாத விந்தைகள் ஆகும்.

இந்தப் பாடலைக் கம்பன் அமைத்திருக்கும் சூழ்நிலையே தனித்தன்மை வாய்ந்தது. கம்பன் சித்திரிக்கும் கதைப்போக்கு அனைவரும் அறிந்தது தானே? இராமனின் சொல்லுக்குக் கட்டுப்பட்டு, சுமந்திரன், உறங்கிக் கொண்டிருக்கும் ஒருவரும் உணர்வுறாத வகையில், தேரை அயோத்தியை நோக்கி ஓட்டிச் செல்கின்றான். தேர் அயோத்தியை நோக்கித் திரும்பிய பிறகு, இராமன் நள்ளிரவில் சீதையுடனும், இலக்குவனுடனும் நடக்கத் தொடங்குகிறான்.

''தையல் தன் கற்பும் தன் தகவும் தம்பியும்
மையறு கருணையும் உணர்வும் வாய்மையும்
செய்ய தன் வில்லுமே சேமமாக கொண்டு
ஐயனும் போயினான் அவ்வின் நாப்பணே.

(கம்பன்-அயோத்யா-தைவ 48)

வானம் கைவிளக்கு எடுத்தது போலவும், தருமத்தின் வதனம் போலவும், சந்திரன் வானில் உதிக்கின்றான். இரவு முழுவதும் நடந்து, சூரிய உதயத்திற்கு முன்னால், மூவரும் இரண்டு யோசனை தூரம் சென்ற

னர். இதைக் குறிப்பிடுகின்ற கம்பன், அடுத்தாற் போல் சுமந்திரன் சென்ற திசையில் நம்மை அழைத்துச் செல்கின்றான். வசிட்டன், சுமந்திரனோடு அரண்மனைக்குச் செல்வது, அங்கு, இராமன் கானகம் சென்றான் என்பதைக் கேட்டவுடன், தசரதன் ஆவிபிரிவதும், கௌசலையின் துயரம், முதலானவைகளை அடுத்து, தசரதன் உடலைத் தைலத்தில் இட்டு, பரதனை அழைத்துவர தூதுவரை அனுப்புகிறான் வசிட்டன். இதற்குள், தேர்ச்சுவட்டினைப் பின் தொடர்ந்து, மகிழ்ச்சியுடன் அயோத்தி திரும்பிய மக்கள், மன்னன் மரணத்தையும், இராமன் வனம் சென்றதையும் அறிந்து துயர் உறுகின்றனர். இந்த நிலையில் அயோத்தியில் இருந்து, இராமன் சென்ற திசையில், ''நள்ளிற் போன வரிசிலைக்கை நம்பி செய்கை நடத்துவாம்'' என்று கூறி நம்மை அழைத்து வருகின்றான்.

வான்மீகத்தில், சுமந்திரனை அயோத்திக்கு அனுப்பிவிட்டு, இராமன் நடக்கத் தொடங்கும் காட்சி அமையவில்லை. குகனைச் சந்தித்து, வனத்திற்குச் சென்று, பர்ணசாலை அமைத்துக் கொண்டு, அதில் புகும் வரையில் சுமந்திரன் இராமனுடன் இருக்கின்றான். (வான்மீகம் - அயோதியா காண்டம் - சர்க்கம் 56). அதற்குப் பிறகு தான் சுமந்திரன் அயோத்தி திரும்புகின்றான். (சர்க்கம்: 57), தசரதன் மரணம் 64 ம் சர்க்கத்தில் இடம் பெறுகின்றது. இராமன், சீதை, இலக்குவன் இந்த மூவர் மட்டும் தனியாக வழிநடக்கும் காட்சி இடம் பெற அங்கு வாய்ப்பில்லை. ஆனால் கம்பன் அந்த நிலையை மாற்றி, ''தையல் தன் கற்பும், தன் தகவும், தம்பியும்'' துணையாக இராமன் நடப்பதைச் சித்திரிக்கிறான். நிலவு அவர்களுக்கு வானம் எடுத்த கை விளக்கு போல் துவங்குகின்றது.

இதற்குப் பிறகு, இராமனைக் கான கம்பன் நம்மை அழைத்துச் செல்வது, தசரதன் மரணத்திற்குப் பிறகு தான். ஆனால் அந்த மரணத்தின் துயர நிழல் அப்போது இராமனது பாதையில் படியவில்லை. மாறாக, அழகின் திரட்சி, அமுதக் கதிர்களைப் பரப்பியபடி எழுகின்றது. பாடல் பலரும் அறிந்தது தானே?

''வெய்யோன் ஒளி தன் மேனியின்
விரிசோதியின் மறைய
பொய்யோ எனும் இடையாளொடும்
இளையானோடும் போனான்
மையோ, மரகதமோ, மறிகடலோ
மறைமுகிலோ
ஐயோ, இவன் வடிவு என்பதோர்
அழியா அழகுடையான்

(கம்பன்-அயோத்யா-கங்கை-1)

இந்தக் காட்சிக்கு முன்னால்: தைல மாட்டுப் படலத்தில் இடம் பெறும் தசரதன் மரணம், பகைப்புலமாக அமைத்து, இந்தக் காட்சியின் அழியா அழகு இன்னும் கோவையுற துணை நிற்கின்றது.

இரவில் நடந்து, மூவரும் இரண்டு யோசனை தூரம் கடந்தார்கள். கீழ்த்திசையில் கதிரவன் தோன்றினான். அவன் ஒளி, மேன்மேலும் அதிகரிப்பதற்குப் பதிலாக, மெல்ல மெல்ல மறையத் தொடங்கியது. காரணம்? அங்கே இன்னொரு சோதி, வர, வர விரிந்து கொண்டே வருகின்றது! அதன் ஒளியில், சூரியனின் ஒளி மறைகின்றது. அந்த இன்னொரு சோதி எங்கிருந்து வருகின்றது என்று கவனித்தால், வழிநடந்து போகின்ற ஒருவனுடைய திருமேனியில் இருந்து விரிகின்றது. அந்த ஒளிவெள்ளத்தின் ஊடே, 'பொய்யோ' என இடையாவுடனும், இணையானுடனும் அவன் போனான்.

''வெய்யோன் ஒளி தன் மேனியின்
விரிசோதியின் மறைய
பொய்யோ எனும் இடையாளொடும்
இணையானொடும் போனான்.

அந்தக் காட்சியில் வேறு எந்த பாத்திரமும் இல்லை. இவர்கள் மூவர் மட்டும்தான். இந்தக் காட்சியைக் காட்ட வரும் கம்பன், ''மையோ, மரகதமோ, மறிகடலோ, மழை முகிலோ'' என்று மெய்மறந்து பேசுவதையும், ''ஐயோ, இவன், வடிவு என்பதோர் அழியா அழகுடையான்'' என்று பரவசமுடைந்து பாடுவதையும் பல அறிஞர்கள் பாராட்டிப் பேசுவர். சௌந்தர்ய எல்லையாய் இராமன் இங்கு விளங்குகின்றான்.

'மையோ, மரகதமோ' முதலான தொடர்களெல்லாம், ஆழ்வார் பாசுரங்களில் பல இடங்களில் வருபவை, நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில் பயிற்சி உள்ளவர்களுக்கு, 'ஐயோ' என்னும் 'சொல், 'அமலனாதி பிரான்' பாடல்களை நினைவுறுத்தும், திருப்பாணாழ்வார் திருவரங்கமுடையானை ஸேவித்து, பாதாதிகேசம் பார்த்துப், பார்த்து மகிழ்ந்து, கடைசியில் அவனை முழுவதும் ஆகப் பார்த்து, ''எல்லையற்ற பேரழகினை உடைய இந்த நீலமேனி, ஐயோ, என் நெஞ்சை நிறைகொண்டது'' என்கின்றார்.

ஆகமா மரத்தின் இலைமேல் ஒரு
பாலகனாய்
ஞாலம் ஏழும் உண்டான் அரங்கத்து
அரவின் அணையான்
கோலமாமணி ஆரமும், முத்துத்தாமமும்,
முடிவில்லதோர் எழில்
நீலமேனி, ஐயோ, நிறைகொண்டது
என் நெஞ்சினையே''.

சௌந்தர்ய ஒளியாய்க் காட்சியளிக்கும் இந்தக் கோலமோ, ''அழகுக்கு-அழகுமலர்களுக்கு - உயிருட்டும் அழகுத் தெய்வமே இவர்தானோ'', என்று மயங்கி, ''அச்சோ ஒருவர் அழகியவா'' என்று முடியும், அருளிச் செயல் பெரிய திருமொழி பாடல்களை (பெரிய திருமொழி-9), நினைவுக்குக் கொணரும்.

மையோ, மரகதமோ என்று தொடங்கி அழகுச் சொற்கள் அமையும் வருணனை, ''எப்படி வருணித்தாலும், நிறைவு இல்லையே'' என்று துடிக்கும் மனத்தைப் பிரதிபலிக்கும் ''ஐயோ'' என்ற சொல் இவைகள் மட்டும் அல்லாமல், பாடலில் அற்புதமாக அமைந்துள்ள இன்னொரு சொல்லைப் பார்த்தோமானால், அந்தச் சொல், அதன் பொருள் ஒரு புது அனுபவத்தைத் தருவது தெரியும். ''ஐயோ''விற்கு அருந்தாற்போல் அமைந்திருக்கும் ''இவன்'' என்னும் சொல்தான் அது. பாடலை மறுபடியும் பார்ப்போமோ?

''வெய்யோன் ஒளி தனி மேனியின்
விரிசோதியின் மறைய
பொய்யோ எனும் இடையாளொடும்
இளையானொடும் போனான்''

இந்த முதல் இரண்டு வரிகளில், இராமன், சீதை இலக்குவன் ஆகிய இருவருடன் செல்லும் காட்சி சித்திரிக்கப்படுகின்றது. அதாவது மூவர் செல்கின்றார்கள். ஆனால் அந்தக் காட்சியில் லயித்த கம்பன் மனமோ, மூன்றாவது வரியினைப் பாடும்போது, ''மையோ, மரகதமோ, மதி கடலோ, மழை முகிலோ'' என்று, இராமன் ஒருவனை மட்டுமே, மீண்டும், மீண்டும் வருணித்து, உணர்ச்சிப் பெருக்கால் தடுமாறுகின்றது. இது ஏன்? நடந்து சென்ற மூவரில், இருவர் மறைந்து, இராமன் மட்டுமே கம்பனுக்குப் புலனானான்; கம்பன் இராமனைத் தரிசித்தான்; இங்கு, கம்பனுக்கு இராமன் பிரத்தியட்சம். இதற்குச் சான்றாக நிற்பது 'இவன்' என்ற சொல். இரண்டாவது வரியின் இறுதியில், ''போனான்'' என்று கூறி, நான்காம் வரியில், கண்ணெதிரே நிற்பவனைக் கண்டு குறிப்பிடுவது போல், 'இவன்' என்று குறிப்பிட்டால், கம்பனைப் போன்ற ஒரு மாபெரும் கவிஞன் குறிப்பிட்டால், இந்தப் பாடலைப் பாடும்போது, கம்பனுக்கு ''இராம தரிசனம்'' சித்தியாயிற்று என்பதை இந்தச் சொல் — ''அண்மைச் சுட்டாக'' விளங்கும் ''இவன்'' என்ற சொல் குறிப்பதாகக் கொள்ளலாம் அல்லவா?

அழகை தரிசித்த பரவசத்தை, உவகையை - ''ஐயோ, இவன்'' என்று மகிழ்ச்சியுடன் கூவி பூரிப்பு அடைகின்றான் கம்பன். 'ஐயோ', என்னும் சொல் அதிசயமுற இரங்கல்'' என்று சூடாமணி நிகண்டு விளக்கம் தரும், திருக்கோவையாரில் 'பேராசிரியர் (384-ம் பாடலுக்கு உரை), 'ஐயோ' என்ற சொல்லைக் குறித்து 'இது உவப்பின் கண் வந்தது' என்று குறிப்பிடுகின்றார். அழியா அழகைத் தரிசித்த மகிழ்ச்சி, 'ஐயோ' என்னும் சொல்லாக வந்தது; தரிசனம் கிட்டிய உண்மை ''இவன்'' என்னும் சொல்லுக்குள்ளே பொதிந்து கிடக்கின்றது.

தாகூர் சித்திரித்துள்ள மலருக்கும் கனிக்கும் உள்ள உறவைப் போல், 'இவன்' என்னும் சொல்லும், அந்த சொல்லில் பொதித்திருக்கும் பொருளுக்குரிய உணர்வும் உறவாடுகின்றன; புத்தம் புதிய உண்மையை நமக்கு அவை தெளிவாக்குகின்றன. அதாவது; 'எல்லை நன்று இன்மை' என்னும் மெய்ப்பொருளினை நோக்கி, 'எல்லை இல்லாத' ஆன்ம பயணத்தை மேற்கொண்டவர்களில் கம்பனும் ஒருவன். அந்தப் பயணத்தின் போது, சரேலென ஒரு நொடியில் இறைத் தத்துவத்தை உணர்ந்து, மெய்ப்பொருளைத் தொட்டு நிற்கக்கூடிய வாய்ப்புக்கள், இறைவன் திருவருளால், அவனுக்கு ஏற்பட்டிருக்கலாம். இந்த வாய்ப்புக்களால் ஏற்பட்ட 'அனுபவப் பொருண்மை', சத்தியப் பொருண்மையுடன் உறவு பூண்டு, உரிமை கொண்டாடி, தன் தனித்தன்மையை வெளிப்படுத்தும் தன் அனுபவ நிலையாக மலர்ந்து, காப்பியத்தில் அங்கங்கே தன்னை இனம் காட்டிக்கொள்ள, பொருத்தம் நிறைந்த பாத்திரங்களின் பேச்சினைத் தன் குரலாய் நவிக்கும்படி செய்கின்றது.

இத்தகைய நிறைவு உணர்ச்சியுடன், 'வெய்யோன் ஒளி தன் மேனியின்'' என்று தொடங்கும் பாடலை மீண்டும் படித்தோமானால் — அல்லது இசை அமைத்துப் பாடினோமானால்—'இவன்' என்னும் சொல்லை உச்சரிக்கத் தொடங்கும்போது, ''ஒரு குறிப்பிட்ட பாடலில் அமையும் ஓர் ஒப்பற்ற சொல்லின் ஆட்சியால், அதன் பொருள் ஆழத்தால் எத்தகைய புது அனுபவத்தை புது உண்மையை கம்பன் வழங்குகின்றான்'' என்று வியந்து, வியந்து மகிழ்வோம். அந்த வியப்பு உணர்ச்சி பயிராக்கும் ஒளி வட்டத்தில், இரண்டொரு காட்சிகள், தோன்றித், தோன்றி மறைந்து, மறைந்து உள்ளச் சிலிர்ப்பை உண்டாக்கும். அங்கே,

கனியைத் தேடும் மலரும், மலரில் பொதிந்து நிற்கும் கனியும், ஒன்றோடு ஒன்று உறவாடும்.

மலரும், கனியும் மெல்ல மறைய,
மூவரைக் கண்டு, ஒருவனில்
லயித்த கம்பன் பார்வையும்,
அழியா அழகின் வடிவாய்,
கம்பனுக்குக் காட்சிதரும் இராமன்
ஒளியும், ஒன்றோடு ஒன்று இணைய,
'இவன்' என்னும் சொல் ஒலிக்க,
அந்தச் சொல்லுக்குரிய பொருளின்,
உணர்வு நிலையான 'இராமதரிசனம்',
சொல்லோடு நன்றி, 'இவனாக'க்
கண்முன் நிற்கின்றது.

இந்த அற்புதக் காட்சியைக் கண்டு நிறைவு கொள்வதற்குள், 'எல்லை நன்று இன்மை' என்னும் பொருளின் உருவகம் போல், விரிந்து கிடக்கும் வானம், பெருமிதத்தின் பொலிவாய் விளங்குகின்றது.

அந்த வானவெளியில், சத்தியப் பொருளைத் தேடிக்கொண்டு, தன் சிறகுகளைப் பரப்பிய வண்ணம், மனித உயிர் என்னும் ஹம்சம் மேலே, மேலே பறந்து செல்கின்றது.

## அடிக்குறிப்புகள்

1) Page 22 — Stray Birds — by Rabindra Nath Tagore

2) Page 51 — Wisdom of the Vedas - Part II —

3) கீதாஞ்சலி-71 — கவியரசர் கண்ட கவிதை — பக்கம் 99

4) Page 183 — 'Milton' by Mark Pathison

5) வான்மீகம் — ஆரணிய காண்டம் — சர்க்கம் 4

6) வான்மீகம் — ஆரணிய காண்டம் — சர்க்கம் 5

7) வான்மீகம் — ஆரணிய காண்டம் — சர்க்கம் 71

8) வான்மீகம் — யுத்த காண்டம் — சர்க்கம் 50